உ

ஸ்ரீ கா[illegible]

[illegible]காமாக்ஷி லீலா பிரபவம்

அல்லது

# காமாக்ஷி விலாசம்.



சித்தாந்த போதரத் நாகரம்.

கா. ஆலால சுந்தரம் பிள்ளை

அவர்களால்

மொழிபெயர்த்தது.

---

கா. ஏகாம்பரம் பிள்ளை,

குமாரன். கா. ஏ. வல்லிநாதனால்

சென்னை-சூளை,

பெரியநாயகியம்மன் அச்சுக்கூடத்தில்,

பதிப்பிக்கப்பட்டது.

Registered.

மூன்றாம் பதிப்பு.



விலை] 1939 [அணா 6

ஸ்ரீகாமாக்ஷிதேவ்யைநம:

# அத்தியாய ஸ[illegible]

## முதலத்தியாயம்.

இது, பராசத்தி பலவிதமான பிலரூபமாயும், யந்திரரூபமாயும் பிம்ப ரூபமாயும், இன்னும் பலரூபமாயுமிருந்து தனது ஆதிக்கியத்தைக் காட்டுகின்ற க்ஷேத்திரங்கள் பலவிருப்பினும் பராசத்தி பிலயந்திர பிம்பரூபமாயிருக்கின்ற மகிமையையும், சிவசொரூபமா யிருக்கின்ற அற்புதக் காட்சியையும், விஷ்ணு ரூபமாயிருக்கின்ற மோகனக்காட்சியையும், விளக்குவது காஞ்சியாயிருத்தலால் இது மேம்பாடுடையதாயிற்றென்பதையும், சிவகாமேஸ்ட்ராங்கஸ்தா, சிவஸ்வாதீனவல்லபா, என்கிற நாமங்களைப பராசத்தி யுடைத்தாயிருப்பதால் சோதிலிங்க சத்திசொரூபிணியாயும், விஷ்ணுரூபிணீ, விஷ்ணுமாயாவிலாசினீ என்கிற நாமங்களையு முடைத்தாயிருப்பதால் வரதராஜமூர்த்தியாயும் இருக்கின்றாளென்பதையும், சோதிலிங்க சத்திசொரூபமாயிருக்கின்ற அவசரம் முத்தான்மாக்கள் சர்வமந்திர சர்வஜ்ஞான சித்தியடையும்பொருட் டென்பதையும், வரதராஜமூர்த்தியா யிருக்கின்ற அவசரம் பெத்தான்மாக்கள் மாயாவிலாசமாயிருக்கின்ற இஷ்டகாமிய போகசித்திகளை யடையும் பொருட்டென்பதையும் விளக்குவது.

இவைகளின்றி இவ் வத்தியாயம் காஞ்சிக்கு முதலாவரணத்தி னெல்லையாயுள்ளது,—கிழக்கில் சமுத்திரம் எனவும், தெற்கில் தக்ஷிண பினாகினி எனவும், மேற்கில் சிலாஹ்ருத

மெனவும், வடக்கில் சுவாமி புஷ்கரணி எனவும்,—இரண்டாம் ஆவரணத்தினெல்லையாயுள்ளது,—கிழக்கில் மாவலிபுரம் எனவும், தெற்கில் தேவகிபுரம் எனவும், மேற்கில் விரிஞ்சிபுரம் எனவும், வடக்கில் நாகலாபுரம் எனவும்,மூன்றும் ஆவணரத்தினெல்லையாயுள்ளது,—கிழக்கில் திரிவேணிசங்கமநகரம் எனவும், தெற்கில் வியாக்கிரபுரம் எனவும், மேற்கில் க்ஷீராப்தி நகரம் எனவும், வடக்கில் நந்திகங்காபுரம் எனவும் கூறப்படும் மூன்றுவரணங்களை யுடைத்தெனவும், சத்திய விரதக்ஷேத்திரமுதலாக எண்ணப்பட்ட ஒன்பது நாமங்களை யுடைத்தெனவும்,—இவைகளன்றி பாலாற்றின் வரலாற்றையும்,—பராசத்தி மூன்றுவித சொரூபமானமையையும், அவ்வவற்றின் வரலாறுகளையும் விளக்குவது.

## இரண்டாவது அத்தியாயம்.

இது, வரதராஜருடைய க்ஷேத்திரத்தினெல்லை க்ஷேத்திராங்கி என்னுந் துர்க்காலயமுதல் நரசிஹ்மராலயம் வரையில் எனவும், அவ்வெல்லைக்குள் முக்கியமான துர்க்காலயம் நான்கெனவும், சிவாலயம் மூன்றெனவும், விஷ்ணுவாலயம் எட்டெனவும், முத்திரைகளைங்தெனவும், தீர்த்தங்கள் நான்கெனவும், இவற்றின் வரலாறுகள் இவை எனவும் விளக்குவது.

## மூன்றுவது அத்தியாயம்.

இது, வரதராஜப்பெருமாள் வீற்றிருக்கின்ற அத்திகிரி, இலக்ஷுமி தேவி சரஸ்வதிதேவி இவ்விருவரும் தங்கள் தங்களுக்கே பெருமையுடைத்தென்பதை நாட்டிக்கொள்ள இந்திரனை வின்வ அப்பொழுது சரஸ்வதியால் அவனுக்குவந்த

சாபவுருவெனவும், அந்த அத்திகிரியில் நரசிஹ்மர் குஹா நரசிஹ்மராய் வீற்றிருத்தற்குக் காரணம் இதுவெனவும், பெருமாள் சந்நிதிக்குப் பின்பக்கத்தில் இரண்டு பல்லிகள் இருக்குங்காரணம் இதுவெனவும் இவற்றின் வரலாறுகள் இவை எனவும் விளக்குவது.

## நான்காவது அத்தியாயம்,

இது, அத்திகிரியில் திருமால் வரதராஜமூர்த்தியாய் வருவதற்குக் காரணம் பிரமனுக்குச் சிருட்டிதண்டங் கொடுத்தற்கெனவும், வேகவதி என்னும் நதி சிருட்டிதண்டம் பெறுதற்குப்பிரமன் செய்யத்தொடங்கிய யாகத்தை யழித்தற்குவந்த சரஸ்வதிதேவி எனவும், அந்நதியால் யாகத்துக்கு யாதொரு இடையூறும் வராவண்ணம் வரதராஜர் காத்தவகை இதுவெனவும், இந்த அத்திகிரியில் வரதராஜப்பெருமாள் வைகுண்ட முதலியவைகளைக் காட்டிலும் மிகப்பிரியமுடையராயிருத்தற்குக் காரணம் இதுவெனவும் விளக்குவது.

## ஐந்தாவது அத்தியாயம்.

இது, வேகவதியாய்வந்த கலைமகள் திருமாலால் அவமானத்தையடைந்தனளாதலால் அவ்வவமான நிவிர்த்தி அவராலேயேயானமையும் நிவிர்த்தியான பின்னர் பிரமதேவனோடு முன்போல் கூடி மகிழ்ந்தமையும் விளக்குவது.

## ஆறுவது அத்தியாயம்.

இது, ஏகாம்பர நாதருடைய எல்லை காயாரோகணேஸ்வராலயமுதல் சுவேதப்பெருமாளாலயம் வரையில் எனவும்,

அவவெல்லைக்குள் முக்கியமான துர்க்காலயம் நான்கெனவும், சிவாலயம் எட்டெனவும், விஷ்ணுவாலயம் எட்டெனவும், முத்திரைகள் ஐந்தெனவும், தீர்த்தம் நான்கெனவும், இவற்றின் வரலாறுகள் இவை எனவும் விளக்குவது.

## ஏழாவது அத்தியாயம்.

இது, ஏகாம்பரநாதர் இடங்கொண்டிருக்கும் மாவிருக்ஷத்தினுடைய சொரூபம் இதுவெனவும், அது ஓர் பிரளயகாலத்தில் மார்க்கண்டேயருக்காகவளர்ந்து அவரைக்காத்து அவரைக்காஞ்சியில் வாழச் செய்த விதம் இதுவெனவும் விளக்குவது.

## எட்டாவது அத்தியாயம்,

இது, ஏழாவது அத்தியாயத்தில் சொல்லிய மாவிருக்ஷமூலத்திலிருக்கும் சோதிலிங்கப் பெருமானது சொரூபம் இதுவெனவும், அச்சோதிலிங்கப் பெருமானைத் தழுவுவதற்கு உமாதேவியார் ஸ்ரீகயிலாயத்தை விட்டு வந்த காரணம் இதுவெனவும், கயிலாயத்தை விட்டு அம்மையார் பத்ரிகாச்சிரமத்தை வந்தடைந்தமையும், இந்த ஆச்சிரமத்திலுள்ள காத்தியாயனமாமுனிவர் அவ்வம்பிகைக்குயோகதண்டமுதலியவை கொடுத்தமையும், அவைகளைப் பெற்றுக்காசிக்கு வந்தபின்னர் அங்கு யாவரையும் வருத்தியிருந்த துவாதச வருடக்ஷாமத்தைப் போக்கினமையும், அதன்பின்னர் காஞ்சிக்கு வந்தபோது யோகதண்ட முதலியன வெல்லாம் சிலபூஜைக்குரிய சிவலிங்க மூர்த்தி முதலியனவாக மாறினமையும், அதன் பின்னர் அம்மையார் காஞ்சியில் அரியதவமியற்றிவந்ததினால்

சிவபெருமானுர் கங்கையைக் கம்பாநதியாகப் பெருகிப்போகச் செய்தமையும், அவ்வெள்ளத்தை உமாதேவியார் பிரளய பந்தனியைக் கொண்ட டக்கினமையும், மீளவும் சிவபெருமானுர் பிரளய பந்தனியினுடைய கபாலத்திலடங்கியிருந்த வெள்ளத்தைப் பெருகிப்போகச் செய்தமையும் அவ்வெள்ளத்தைக் கண்டு காமாக்ஷிதேவியார் ஏகாம்பரநாதரைத் தழுவின்மையும், தழுவிய மாத்திரத்தில் காட்சிகொடுத்துத் திருமணஞ் செய்து கொண்டு யாவருக்கும் அனுக்கிரகஞ் செய்தமையும் விளக்குவது,

## ஒன்பதாவது அத்தியாயம்.

இது, சர்வதீர்த்தமானது ஏகாம்பரநாதர் தம்முடைய காற் பெருவிரலால் உண்டாக்கப்பட்டதென்பதும், இரண்டுமுறை பெருகிவந்த கம்பைவெள்ளம் அதில் வீழ்ந்துள்ளவென்பதும் அந்தச்சர்வதீர்த்தம் காமாக்ஷிதேவியினுல் கட்டப்பட்டதென்பதும், பின்னர் அத்தேவி தாம் செய்துவந்த முப்பத்திரண்டறங்களை நடத்திவரக் கணபதியை நியமித்தாரென்பதும், சர்வதீர்த்த மகிமையினுல் ஓர் பிராமணனுடைய பிதுர்க்கள் நரகத்தினின்றும் கயிலைக்கேகினுர்களென்பதும் விளக்குவது.

## பத்தாவது அத்தியாயம்.

இது, காமாக்ஷி தேவியினுடைய எல்லை க்ஷேத்திராங்கி என்னுந் துர்க்காலயமுதல் சுவேதப்பெருமாளாலயம் வரையில் என்பதும், அவ்வெல்லைக்குள் முக்கியமான துர்க்காலயம் ஆறென்பதும், விஷ்ணுவாலயம் நான்கென்பதும், சிவாலயம் ஐந்தென்பதும், தீர்த்தம் நான்கென்பதும் காமாக்ஷி

தேவியினுடைய ஆலயத்துக்குள் அன்னபூரணியாலயம், சாஸ்தாவாலயம், அஞ்சன காமாக்ஷி சந்நிதி, சந்தானஸ்தம்பம், உளவென்பதும் இவற்றின் வரலாறுகள் இத்தன்மைய வென்பதும் விளக்குவது.

## பதினொன்றும் அத்தியாயம்.

இது, காமாக்ஷிதேவியினுடைய ஆலயத்துள் பராசத்தி வீற்றிருக்கும் மண்டபம் காயத்திரி மண்டபம் என்பதும், அதற்கு ஆதாரமா யுள்ளது மஹாபிலம் என்பதும், அந்த மஹா பிலத்துக்குரிய மஹிமையினால்வந்த நாமங்கள் இவை யென்பதும், அவற்றுள் காமகோடி காமகோஷ்டம் என்னும் இரண்டு நாமங்களுக்குள்ள விசேஷணங்கள் இதுயென்பதும், பின்னர் பந்தகாசுரனுடைய உபத்திரவம் இத்தன்மைத் தென்பதும், அவ்வசுரனுடைய உபத்திரவத்துக்கு அஞ்சி அங்கு வந்த தேவர்களுக்கு அந்த மஹாபிலத்தினுடைய பிரபாவம் இத்தன்மைத்தென்று விளக்கிய விதம் இத்தன்மைத்தென்பதும், அந்தப் பிலபிரதக்ஷண மகிமை இத்தன்மைத் தென்பதும் விளக்குவது.

## பன்னிரண்டாம் அத்தியாயம்.

இது, காமகோடி பீடத்தில் வீற்றிருக்கும் ஸ்ரீ திரிபுரசுந்தரியினுடைய வர்ணனையையும், தேவர்களுடைய துன்ப நிவிர்த்தியின் பொருட்டுப் பிலத்தினின்றும் தேவி வெளிப்பட்டு வந்து உலகினைப் பஸ்மீகரப்படுத்தித் திரிமூர்த்திகளை யுண்டாக்கிப் பின் மறைந்து போனமையும், பின்னரத்தேவி பந்தகாசுரப் பிரேதத்தோடு வெளி வந்தமையும், வெளிவந்து

தேவர்களுக்கு அம்பந்தகனைப் புதைத்து தனக்காலயமுண்டாக்கித் தன்னைப் பிரதிஷ்டைசெய்து தெரிசிக்கும் விதத்தைச் சொன்னமையையும், அவர்கள் தன்னைத் தெரிசித்த பின்னர் அவர்களுக்குத் தன்வரலாறெல்லாம் தெரிவிக்கின்றமையும் தேவிசொன்னதுபோல் அத்தேவர்கள் பூஜித்தமையும் நான்குயுகங்களில் பராசத்தியைப் பூசித்தார் இவரிவரென்பதையும் விளக்குவது.

## பதின்மூன்றும் அத்தியாயம்.

இது, பந்தகாசுரனைப்புதைக்கத்தொடங்கிய பொழுது அந்தப்பள்ளத்தில் தவஞ்செய்திருந்த அசுரனைத் திருமால் கொல்லத் தொடங்கிய காலத்தில் அசுரக்கூட்டங்கள் பெருவெள்ளமாகத் தோன்ற அவைகளை யொழிப்பதற்கு இரண்டு சிவபூதங்கள் தோன்றி அவைகளை யொழித்துத் திருமாலோடு போர்செய்து, தோல்வியடைந்துபோகத் திருமால் நின்றார் இருந்தார் கிடந்தார் என்கிற மூன்றுவித கோலங்கொண்டமையும், மூன்றுவித கோலங்கொண்ட திருமால் சிதபூதங்களை இம்சித்தது சிவாபராத மென்றெண்ணி அது நீங்குதற்குச் சிவபெருமானைத் தியானிக்க அவரனுக்கிரகத்தால் பஞ்சதீர்த்தமுண்டால் அவரபராதத்தைப் போக்கினமையும், பின்னர் அவ்விரண்டு பூதங்களை அத்தீர்த்தத்துக்குக் காவலாக நியமித்து அவைகளுக்கு ஆகாரதிருப்தி களுண்டாக்கித் திருமாலையும் அவ்விடத்தில் ஓர் திருப்தியாகக் கொண்டிருக்கச் செய்தமையும் விளக்குவது.

பதினான்காம் அத்தியாயம்.

இது, ஸ்ரீ ஏகாம்பரநாதருக்கு வல்லபையாயிருந்த காமாக்ஷி தேவி பிரமாவினுடைய வேண்டுகோளால் சுவர்ண விக்கிரகமாய் நியமிக்கப்பட்ட காரணத்தையும், அந்த அம்பிகையினுடைய சவுந்தரியங்களையும், இந்தக்காஞ்சி க்ஷேத்திரத்தில் சிவக்ஷேத்திரங்கடோறும் தேவியில்லாமைக்குக் காரணத்தையும், சிவபெருமானாது நெற்றிக்கண்ணால் எரிந்துபோன மன்மதன் காமாக்ஷிதேயினிடத்தில் வரம்பெற்றுக் கோடி மன்மதர்களாய் வரப்பெற்று ருத்திரகோடிகளைவெற்றிகொண்டமையும், மன்மதகோடியர் உண்டான காலத்தில் பூமண்டலத்திலுள்ள சகல சிவக்ஷேத்திரங்களிலும் சத்திரூபமாகிய அம்பிகை யுருவங்களெல்லா மறைந்து போகபின் பிரமனால்பிரதிஷ்டையான காரணத்தையும், பிரமனை நோக்கிச் சுவர்ன காமாக்ஷிக்கும் ஏகாம்பரநாதருக்கும் திருக்கலியாணம் நடத்த வேண்டிய விதிமுறைகளையும்,பராசத்தியையும்,தபஸ்காமாக்ஷியையும், சுவர்னகாமாக்ஷியையும் ருத்திரயாமளதந்திரப்படிச் செய்யவேண்டிய பூஜையினுடைய பேதமுறைகளைச் சொன்னமையும். பிரமன் தனக்கு ஸ்ரீ சக்கரஸ்தானத்தை மிதித்ததனாலுண்டாகிய கண்குருட்டைப் போக்கிக்கொண்ட விதத்தையும், பின்னர் பராசத்தியைப் பூசித்தவர் வரலாற்றையும் விளக்குவது,

அத்தியாய விஷய சூசனை முற்றிற்று,

---

# விடுபட்டவை.

முதற்பக்கம் ௫-வது வரியில் (௬௪) அவற்றுட்சிறந்தன—(௨௬)
அவற்றுட்சிறந்தன (௫.௬) அவற்றுட்சிறந்தன—(௧௮)

ஷை பக்கம் ௮-வது வரியில் ஜாலந்தரபீடத்தில்—மனோபவ மென்னும்-மத்திய கூடத்தை

ஷை பக்கம் ௧௧-வதுவரியில் ஜாலந்தரபீடம் ஜ்வாலாமுகி க்ஷேத்திரததிலும் ஒட்யாணபீடம் ஜகந்நாதத்திலுமுள்ளன.

## அம்சம் என்பதின் அளவு.

160 அம்சம் கொண்டது - ஒருயோசனை

ஒருயோசனை என்பது - பத்துமைல்.

---

## பெரிய புராணம்.

| | | | |
|---|---|---|---|
| திருமலைச்சருக்கம் சித்தாந்தபோத வுரை | 2 | 4 | 0 |
| தில்லைவாழ்ந்தணர் சருக்கம் ” | 2 | 0 | 0 |
| இலிமலீந்த சருக்கம் ” | 2 | 8 | 0 |
| இம்மூன்று சருக்கங்களும் சேர்ந்தது | 6 | 8 | 0 |
| 4 மும்மையால் உலகாண்ட சருக்கம் | 1 | 8 | 0 |
| 5வது திருநின்ற சருக்கம் | 1 | 4 | 0 |
| 5 சருக்கமும் சேர்ந்து | 8 | 4 | 0 |
| தேவீபாகவதம் (வசனம்) 3 வால்யம் | 9 | 0 | 0 |
| காரைக்காலம்மையார் புராணம் மூலமும் உரையும் | 0 | 4 | 0 |

உ
தவ்யைநம:

ஸ்ரீ த்ரிபுரசுந்தர்யைநம:

# காமாக்ஷிவிலாசம்.



## முதலத்தியாயம்.

---

### பீடத்திரய விவரணம்.

இப்பூமண்டலம் (௫0) கோடியோசனை விசாலமுள்ளது. இதனுள் (௬௪00) மாத்ருகாகணங்கள் இருக்கின்றன அவற்றுட் சிறந்தன (௬௪) அவற்றுட்சிறந்தன (௧௮) அவற்றுட்சிறந்தன (௩) அவையாவன:—காமராஜபீடம் ஜாலந்தரபீடம் ஒட்யாணபீடம்.

இம்மூன்று பீடங்களையும் பூசித்தவர்-ஹயக்கிரீவர் பிருகுமுனிவர் வியாசமுனிவர்.

இவர்களுள்காமராஜபீடத்தில் வாக்பவகூடத்தைப்பூசித்தவர் ஹயக்கிரீவர். ஜாலந்தா பீடத்தில் மத்தியகூடத்தைப் பூசித்தவர் பிருகுமுனிவர். ஒட்யாணபீடத்தில் பராசக்தி சொரூபமான காமரூபத்தைப் பூசித்தவர் வியாசமுனிவர். இவற்றுள் காமராஜ பீடம் காஞ்சியிலுள்ளது.

### காஞ்சிமண்டலத்தினெல்லை.

கங்காநதிக்குத் தென்பாகத்தில் (௨00) யோசனை தூரத்திற்கு மேலுள்ள சமுத்திரகட்டமே கிழக்கெல்லை, அக்கிழக்கு சமுத்திரத்திற்கு நிருதியில் (௩) யோசனை தூரத்திலுள்ள*தக்ஷிணபினாகியே தெற்கெல்லை, அதற்கு வாயுவில் (௭) யோசனை தூரத்திலுள்ள

*சிலாஹ்ருதமே மேற்கெல்லை, அ[illegible] [illegible]னத்[illegible] (அ) யோசனை தூரத்திலுள்ள சுவாமிபுஷ்கரணியே[illegible] [illegible]ல்லை.

## கிழக்கெல்லையின் மகிமை.

கிழக்கெல்லையாகவுள்ள சமுத்திரகட்டம் காஞ்சிப்பதிக்கெல்லையாக வமைந்தமையானும், சரஸ்வதிதேவி முன்னொருகாலத்தில் தனக்கு நேர்ந்தஓர்*தோஷத்தை மாற்றிக்கொள்ளநதிருவங்கொண்டு இக்கடலிற் சங்கமமாய் பரிசுத்தமடைந்து தன் கணவனோடு சேர்ந்து சமுத்திரராஜனைப்பார்த்து இத்தீரத்தில் எவரெவர் எக்காலத்தில் ஸ்நானஞ்செய்தபோதிலும் அவரெல்லாம் பரிசுத்தராய் விஷ்ணுபதமடைவரென்று வரமளித்தமையானும் இவ்வெல்லைக்கு ஸ்நானஞ்செய்யலாகாதென விதித்தகாலங்களில்லையாயின.

## தெற்கெல்லையின் மகிமை.

முன்னொருகாலத்தில் அசுரகுருவாகிய பிருகுமுனிவர் சிவானுக்கிரகத்தினால் பினகமென்னும் தனுசை பூமியினட்டி கையிலெடுத்தனர். அப்பொழுது பாதாளகங்கை நதிரூபமாய்ப் பெருக்கெடுத்தோடியது. அதுகண்ட முனிவர் இது பினகத்தினாலுண்டானபடியால் பினகியெனப் பெயர்பெற்று வழங்கக்கடவது இதில் ஸ்நானஞ்செய்பவர்கள் புண்ணிய சொரூபிகளாய் சிவலோகமடையக்கடவர்களென்று வரமளித்தனர்.

## மேற்கெல்லையின் மகிமை.

முன்னொருகாலத்தில்அநுமார்அமிர்தம்போலும்பிழைப்பிக்கவல்ல சஞ்சிவினி மலையைப் பறித்தெடுத்து வரும்போது இச்*சிலாஹ்ருததீர்த்தத்திலலம்பிப் பின்னர்லக்ஷ்மணரிடத்திற் கொடுத்தனர். அப்பொழு தத்தடாகத்தைப்பார்த்து இதில் யாரொருவர் ஸ்நானஞ்செய்கின்றார்களோ அவர்கள் சித்தர்களாய் நெடுங்காலஞ்

சீவித்திருந்து பின்தெ[torn] தன்மையடைந்து விஷ்ணுபதத்தை யடையக்கடவர்களென்று [torn]ரமளித்தனர்.

## வடக்கெல்லையின் மகிமை.

முன்னொருகாலத்தில் விஷ்ணுமூர்த்தி லக்ஷ்மிதேவியைக் கலியாணஞ் செய்துகொள்ள வேண்டுமென்று விரும்பிச் சித்தவேடம் பூண்டு திருப்பதி என வழங்கும் சேஷாசலத்தைவந்தடைந்து தன்னுடன்வந்த சீடர்களுக்கு ஸ்நானநிமித்தம் ஓர் தடாகத்தை யுண்டு பண்ணி அதில் விரஜாநதியைப் பிரதிஷ்டைசெய்து அதற்குச் சாக்ஷாத் விரஜாநதி என்றும் ஸ்வாமி புஷ்கரணி என்றும் பெயரிட்டு அதில் அவர்களை ஸ்நானஞ்செய்வித்து இதில் யாரொருவர் ஸ்நானஞ் செய்கின்றார்களோ அவர்கள் இவ்வுலகில் எல்லாப் போகங்களையு மனுபவித்துப் பின் எனது லோகத்தை யடையக்கடவர்களென்று வரமளித்தனர்.

இவ்வெல்லைக்குட்பட்ட பிரதேசம் துண்டீரனென்னும் அரசனால் நீதியோடு ஆளப்பட்டமையான் துண்டீர மண்டலமெனப் பெயர்பெறும்.

## புறநகர்.

காஞ்சிக்குக்கிழெல்லையாகிய சமுத்திரத்திற்கு (௬) யோசனை மேற்கில் மாபலிபுரம், அதற்கு (௫) யோசனை நிருதியில் தேவகீபுரம், அதற்கு (௫) யோசனை வாயுவில் விரிஞ்சிபுரம், அதற்கு (௫) யோசனை ஈசானத்தில் நாகஹலாபுரம், அதற்கு(௫)யோசனை ஆக்னேயத்தில் முற்கூறிய மாவலிபுரம்.

## புறநகரங்களின் வரலாறு.

பூர்வத்தில் மஹாபலிச் சக்கிரவர்த்தி பரமசிவானுக்கிரகம் பெற்றுபெருஞ்செல்வத்தையடைந்து அங்குவாழ்ந்திருந்தனாதலால் மாபலிபுரமெனவும்,—உக்கிரசேனனென்னும் அரசன் பரமசிவனை

யாராதித்துக் கன்னியாரத்னமாகிய [illegible]கீ- என்னும் பெண்ணைப் பெற்றுஅங்குவாழ்ந்திருந்தனனாதலால்தேவகிபுரமெனவும்'— அரம்பையானவள் பரமசிவனைப் பூசித்து இந்திரனுக்கு ஊர்வசி முதலாயினரைக் காட்டிலும் அதிகப் பிரியையாவதற்குத் தவஞ்செய்யப் பிரமன் சிருட்டிசெய்த புரமாதலால் அது விரிஞ்சிபுரமெனவும்,— தேவர்களெல்லாம் மஹாதேவரையருச்சித்து உலகங்களுக்கெல்லாம் நாசந்தரும்படியான நாகத்தினின்றுந் தோன்றிய விஷத்தை அக்கிரபூஜையாகக் கொடுத்தனராதலால் *நாகஹலாபுரமெனவும் பெயர்பெற்றன.

இந்நான்குபுரங்களுட்பட்ட பிரதேசம்ஏகாம்பரநாதர் பூஜார்த்தமாய் வந்த பார்வதி தேவியார் வீற்றிருந்தியற்றிய தபத்தினல் பிரகாசமடைந்தமையான் தபோவனமெனப் பெயர்பெறும்.

## உள் நகர்.

இப்பொழுதுசொல்லிய நான்கெல்லைக்குள் மாவலிபுரத்துக்கு (க) யோசனை மேற்கில்*திருவேணி சங்கமநகரம், அதற்கு (கஉ) யோசனை நிருதியில் *வியாக்கிரபுரவனம், அதற்கு (கஉ) யோசனை வாயுவில்*க்ஷீராப்திநகரம், அதற்கு (கஉ) யோசனை ஈசான்யத்தில் *நந்திகங்காபுரம். அதற்கு(கஉ)யோசனைஆக்னேயத்தில்முற்கூறிய திருவேணிசங்கமநகரம். இதனளவு நூற்றறுபது அம்சதூரமுள்ள தென்பர்.

## உள்நகரங்களின் வரலாறு.

விஷ்ணுமூர்த்தி தன்னுடைய ஓர்பக்தனுக்கு*திருவேணிசங்கமத்தில் ஸ்நானஞ்செய்தால் வரும்பலனை இங்கு தந்தனராதலால் திருவேணிசங்கமநகரமெனவும்,—வியாக்கிரபாதருக்குநடராஜமூர்த்தி பூர்வத்தில் இங்கு நிருத்த தரிசனங்காட்டினராதலால் வியாக்கிரபுரவனமெனவும்,—விஷ்ணுமூர்த்தி தன்னுடைய ஓர் பக்தனுக்

ஒத் திருப்பாற்கடலில் தாம் வீற்றிருக்குங் கோலத்தை இங்கு காட்டினராதலால் க்ஷிராப்தி நகரமெனவும்,—சிவபெருமானி டத்தில் அன்புள்ளவோர் புலையன் தன் விளை நிலமெல்லாம் மழையின்றிப் பாழ்பட வருந்தினன். அதுகண்ட சிவபெரு மானுர் இரங்கி நந்தி வாயின்வழியாகக் கங்கையை வரச்செய்து பயிரை வளர்ப்பித்துப் பின் அவனை அத்தீர்த்தத்தில் முழ் கச்செய்து மோக்ஷமடையச்செய்தனராதலால் நந்திகங்காபுர மெனவும் பெயர்பெற்றன.

இந்நான்கு நகரங்களுட்பட்ட பிரதேசம் முன்பிரம தேவன் செய்த அஸ்வமேதயாகத்திற்குச் சாலையாகவமைந்து விளங்கினமையான் பிரமாசாலையெனப் பெயர்பெறும்.

க்ஷேத்திரஎல்லை—இப்பொழுது சொல்லிய திரவேணி சங்கமத்திற்கு (க) யோசனை மேற்கில் விஷ்ணுக்ஷேத்திரத்தில் பாஞ்சாலிகை என்னுந் துர்க்கையும், அதற்கு (அகூ) அம்சம் மேற்கில் கன்னிகேசரென்னுஞ் சிவபிரானும், அதற்கு(௰0) அம்சம் உத்தரத்தில் சூரியபுஷ்கரணி தீரத்தில் ஸ்வேதாக் கியரென்னும் விஷ்ணுமூர்த்தியும், அதற்கு (கஎ) அம்சம் கிழக்கில்சந்திரபுஷ்கரணி தீரத்தில் க்ஷேத்திராங்கி என்னுந் துர்க்கையும் அதற்கு (ருக) அம்சம் ஆக்னேயத்தில் முற்கூறிய பாஞ்சாலிகை என்னுந் துர்க்கையும் வீற்றிருக்கின்றனர்.

## க்ஷேத்திரநாமவிவரணம்.

இந்நான்கெல்லைக்குட்பட்ட பிரதேசம் கோ (பசு) ரூப மான புண்ணியக்ஷேத்திரமெனப் புகழ்ப்படுகின்றது. அன் றியும் இதுசத்ய விரதக்ஷேத்திரமெனவும், பாஸ்கரக்ஷேத்திர

மெனவும், தைஜஸக்ஷேத்திரமெனவும், சிவசக்திக்ஷேத்திர மெனவும் சக்திக்ஷேத்திரமெனவுங் குறிக்கப்பட்ட காரணப் பெயர்களையுடைத்தாயும், சிவசாந்நித்யகாரகமாயும், மஹா சக்திப் பிரபாவத்துக்கு முதலிடமாயும் அச்சத்திவைப்வத் துக்குப் பிரதானமாயும், அச்சத்தி சொரூபமாகிய விஷ்ணு சக்திக்கு அதிஷ்டானமாயும், நாசமற்றதாயும், பரிசுத்தமான தாயும், சாதுக்களாற் சூழப்பட்டதாயும், ஸ்ரீ புரத்திற்கு நாய கமாகியும், சாக்ஷாத் கைலாச வைகுண்ட ஸ்தானமாயுங் காணப் பட்டுங் கூறப்பட்டுஞ் சிறந்தோங்கிவிளங்குகின்றது.

பரசிவத்துக்கும் பராசத்திக்கும் விஷ்ணுமூர்த்திக்கும் முக்கிய ஸ்தானமாயும் எக்காலத்துக்கும் அழிவில்லாததாயும் சாதுக்கள் வாழப்பட்டதாயுமுள்ளது **சத்தியவிரதக்ஷேத்திரம்** நதிசிரேஷ்டங்களாலும் பர்வதசிரேஷ்டங்களாலும் ஆலய சிரேஷ்டங்களாலும் சூழப்பட்டது **பாஸ்கரக்ஷேத்திரம்,** மஹாபிலங்களாலும் மஹாவிருக்ஷங்களாலும் புண்ணிய விமா னங்களாலும் அடையாளம்பெற்றது **தைஜஸக்ஷேத்திரம்.** சிவக்ஷேத்திரத்தில் விஷ்ணுக்ஷேத்திரமும் விஷ்ணுக்ஷேத் திரத்தில் சிவக்ஷேத்திரமும் பேதமில்லாமற் கலந்திருப்பது **சிவசக்தி க்ஷேத்திரம்,** நிர்குணமானபரமாத் மசக்தியாயும் மஹாமாயாசொரூபியாயும் விளங்குகின்ற யாதொரு பராசக் தியோ அப்பராசக்தி தனுகரணபேதங்களால் சிவரூபமாகவும் சக்திரூபமாகவும் விஷ்ணுரூபமாகவும் பிரிந்து எங்கெங்கும் வியாபித்துச் சகுணமூர்த்தமாய்த் திவ்யக்ஷேத்திரத்தின்கண் வெளிரூபமாகவும் ஸ்திரீரூபமாகவும் புருஷரூபமாகவும் விளங் குவது **சக்திக்ஷேத்திரம்.**

## பாலாற்றின்வரலாறு.

பூர்வத்தில் பராசத்தியிடைய பாலுண்டருளிய மகிமை யினல் சர்வக்ஞராயும் பண்டிதோத்தமராயும் விளங்குஞ் சுப் பிரமணியர் ஓர்கால் பிரமனேநோக்கி ஞானவித்தையானபிரண வார்த்தத்தைக்கேட்ட காலத்தில் அவன் சொல்லமுடியாது சிறையிடைப்பட்டனன். பின்னர் அப்பிரமன் தானும் க்ஷீர பானத்தை விரும்பி நந்திமலையில் தேவிதீர்த்தக்கரையில் தவம் புரிய சிவபெருமானுர் தோன்றினர். அவர்பால் ஸ்ரீதேவியின் மகாமந்திரோபதேசம் பெற்று நூறு வருடம் அதியுக்ரமான தவம்புரிய மகாமயாசொரூபியாயும்ஷாட்குண்ணிய பரிபூரணை யாயும் ஸ்ரீவித்தியாசொரூபியாயும் ஸ்ரீசக்ர நகரத்திற்கு மகா ராஜ்ஞையாயும் வித்தியாசொரூபியாயும் விளங்கும் திரிபுரசுந் தரிபிரத்யக்ஷமாய் தன் தனத்தினின்றும் அமுர்தேஸ்வரியைத் தோற்றுவித்து அப்பிரமன்சிரசில் அமுர்தத் தாரையைப் பொழிவித்துஞானேதயமுண்டாகச்செய்தனர். அப்பொழுது பிரமன் ஆனந்தமடைந்து அவ்வமுர்தத் தாரையைப் பானஞ் செய்து தேக்கிட்ட அமுர்தத்தை வாய் வழியாக வெளியிட்ட னன். அது நந்திமலையிலிருந்துபெருகி பாகுநதி குண்டலினி என்னும் இரண்டு உபநதிகளோடு கலந்து கீழ்சமுத்திரத்தில் சங்கம மடைந்தது. அந்த க்ஷீரபானத்தால் சகலகலா வல்லப மடைந்த பிரமன் அந்நதியை நோக்கி உன்னிடத்தில் யாவர் ஸ்நானஞ் செய்கின்றர்களோ அவர்கள் சர்வ வித்யாபாரங்கத ராய் மோக்ஷமடையக் கடவரென்று வரமளித்தனன்.

முன்னொரு காலத்தில் அந்தணனொருவன் தன்னுடைய குல தர்மங்களைக் கைவிட்டுப் பாபங்களையே செய்து மரண

மடைந்து யமதண்டனைக்குள்ளாய் மீளவும் பூவுலகத்தில்குண்டலினி என்னுநதியில் தவளையாகப் பிறந்திருந்தனன். க்ஷீரநதி அக்குண்டலினியோடு கலந்துவருகின்றபோது ஒருதண்ணீர்ப்பாம்பின் வாயிலகப்பட்டு இறக்குங்கால் பூர்வஜ்ஞானமுண்டாய் மோக்ஷமடைந்தனன். இப்படியே இந்தக்ஷீரநதியில் வசிக்கின்றஉயிர்களுடைய பரிசத்தாலும் தீர்த்தபரிசமுதலியவற்றாலும் முத்தியடைந்தவர்கள் இவ்வளவினரென்று கணிக்கக்கூடுமோ; கூடாவென்க.

## பராசத்தி மூன்று விதமானது.

முன்னொருகாலத்தில் பிரமன், தனது வம்சத்திற் பிறந்திறந்த அசுரர்களுக்கு மறுபடிபிராணனையும் அவர்கள்வேண்டும் வரங்களையுந்தானே கொடுப்பதற்கு வேண்டிய சக்தியைப் பெறுவதற்க்கெண்ணி ஸ்ரீ புரநகரமாகிய காஞ்சி க்ஷேத்திரத்தில் பரமாகாசமூநத்தில் வீற்றிருக்குங் காமாக்ஷிசந்நிதானத்தை யடைந்து தேவியைத்தியானித்துத் தவம்செய்யத்தொடங்குங்கால் அத்தலத்துக்கு யாவராலும் ஓரிடையூறும் வராவண்ணம் விஷ்ணுவினுடைய காதின்றும் வெளிப்பட்ட மதுகைடபரென்னும் அசுரர்களைக் காவலாக வைத்துத்தான் தவஞ் செய்துவந்தனன்.

பராசக்தி காவலிருக்கின்ற அவ்வசுரர்களைச் சங்கரிக்கவெண்ணி, அவ்வசுரர்களுக்கும் பிரமனுக்கும் புருஷ்டம்(பின்பாகத்தின்)நடுவில்நின்று தனது மாயையினால் அசுரர்களுக்கு முன்னும் பிரமனுக்கு முன்னும் நிசரூபத்தோடும் விளங்கினள். பின்னர் அசுரர்களுக்கு முன்னே தோன்றிய சக்திவிஷ்

ணுவடிவங்கொண்டு சக்கிராயுதத்தினால் அவ்வசுரருடையசிரங்களைபறுத்துத் தள்ளி பிலாசாசத்துக்கு ஆக்னேய திக்கிற் சென்று நின்ற திருக்கோலமாய் தன்சொரூபமாகியபிலத்தின் முகமாக நின்றனர்.

மதுகைடபர் சிரம்அறுபட்டு விழுகின்றகாலத்தில் பேரிரைச்சலிட்டனர். அவ்வோசையைக் கேட்ட பிரமன் திடுக்கிட்டு அவ்வசுரரிடம் வேகமாய் வந்து அவர்கள் தலைஅறுபட்டு உதிர வெள்ளஞ்செல்ல இரண்டுமுண்டங்களும் துடிப்பதைக் கண்டு ஆ! ஆ! இதென்ன ஆச்சரியம். என்று அதிக கோபங்கொண்டு இவர்களைகொன்றவன்யாவன், அவனெங்கேயென்று கண்களைச் சுழலவிட்டுத் திக்குகளைப் பார்க்கின்ற பொழுது ஆக்னேய திக்கைநோக்க சக்கிரதாரியாய்விஷ்ணுரூபங்கொண்டு பயந்தோடுவதைப்போல் ஓடுகின்ற தேவியாகிய விஷ்ணுமூர்த்தியைக் கண்டு இவர்தான் அவர்களைக் கொன்றிருக்க வேண்டுமென்றெண்ணி விரைவாக வோடி அவரைச் சமீபித்துக் கொல்ல வுத்தேசித்துப் பிரமாஸ்திரத்தைப் பிரயோகஞ்செய்யத் தொடங்கினன். அதனைக்கண்ட தேவியாகிய விஷ்ணுமூர்த்தி, பிரமனே! நானு உன்னுடைய காவலாளிகளைக் கொன்றவன் அன்று. அவர்களைக் கொன்றவர் உருத்திரமூர்த்தியே, அவர் இப்பொழுதுதான் போயினர் அவரை நீ பார்க்கவில்லையா, அவர் உன்னுடைய பின்புறத்திற்றான் ஓடுகின்றார், திரும்பிப் பாரும் பாரும் என்று சுட்டுவிரலாற் சுட்டிக்காட்டினர். உடனே பிரமன் திருப்பிப் பார்த்தனன். அவன் திரும்பிப் பார்ப்பதற்குமுன் விஷ்ணுமூர்த்தியாய்க் கூறிய

தேவியே அப்பிரமன் கண்ணுக்குத்தோன்ற உருத்திரமூர்த்தி யாய்ச் சென்றனர். அதனை யறியாத பிரமன் தன்னெதிரில் நின்ற விஷ்ணுமூர்த்தியைப் பார்த்து நீர் அவர்களைக்கொன்றவராக நானே அனுமானித்து வந்தேனேயன்றி நீர் கொன்றவரன்று என்று சொல்லிவிட்டு வாயுதிக்கைத் திரும்பிப் பார்த்தனன். அந்த திக்கில் காலகால ரூபியாய், அதிபயங்கரராய், அகோர ரூபியாய், சூலபாசபாணியாய்ப் பைரவரூபியாய் உருத்திரமூர்த்தி ஓடுவதைக் கண்டு இவர்தான் கொன்றிருக்க வேண்டுமென்றெண்ணி கோபத்துடன் அவரைச் சமீபித்தனன். அங்கு உருத்திரமூர்த்தியாய்த் தோன்றிய தேவி அம்பிரமனைப்பார்த்து, பிரமனே! உனக்கு எதனால் கண் சிவந்திருக்கின்றது, உனக்கென்ன கோபமென்று கேட்கபிரமன் ஒன்றுஞ்சொல்லாது நின்றனன். அப்பொழுது உருத்திரமூர்த்தியாகியதேவிகோபித்தவர்போல் பாசுபதாஸ்திரத்தைத் தாங்கித் திவ்யதேஜசோடும் ஆகாயத்தில் மறைந்துபோயினர். அதுகண்டபிரமன் ஆச்சரியமடைந்து உருத்திர மூர்த்திதான் கொன்றவரென்று சொன்ன விஷ்ணுமூர்த்தியைத் திரும்பிப் பார்த்தனன். அவரும் ஆகாயத்தில் மறைந்துபோயினர்.

முதலத்யாயம் முற்றிற்று,

## இரண்டாவது அத்யாயம்

### ஹரிக்ஷேத்திரப்பிரபாவம்.

பராசக்தி அக்னிதிக்கில் வரதராஜமூர்த்தியாய்ப் பிரமன் காணநின்றனராதலால் ஹரி க்ஷேத்திரமாயிற்று. இதற்குப் பெயரைந்து அவையாவன:—

நாமவிவரணம்—ஹரிக்ஷேத்திரம், புண்யகோடிக்ஷேத்திரம், வைகுண்டக்ஷேத்திரம், அஸ்திசைலக்ஷேத்திரம், திரிஸ்ரோதக்ஷேத்திரம்.

எல்லை—சந்திரபுஷ்கரணி தீரத்தில் வீற்றிருக்கும் க்ஷேத்திராங்கி என்னுந்துர்க்கைக்கு (௨௫) அம்சம் ஆக்னேய திக்கிலுள்ள புரந்தரேசருடைய ஆலயமேகிழக்கெல்லை, அதற்கு (௨௫) அம்சம் தக்ஷிணபாகத்திலுள்ளபாஞ்சாலிகாக்ஷேத்திரமேதெற்கெல்லை, அதற்கு (௱௨) அம்சம் மேற்கிலுள்ள சிம்ஹாலாலயமே மேற்கெல்லை அதற்கு (௱௨) அம்சம் வடக்கில் முன்கூறிய க்ஷேத்திராங்கி ஆலயமே வடக்கெல்லை. ஹரிக்ஷேத்திரமாகிய இவ்வெல்லையில் விக்னேஸ்வராலயம் (௧) ஸ்கந்தாலயம் (௧) துற்காலயம் (௩) சிவாலயம் (௪) விஷ்ணுவாலயம் (௫) முத்திரைகள் (௬) தீர்த்தம் (௩) அவையாவன,—

க்ஷேத்திராங்கிக்கு (௱௨) அம்சம் ஆக்னேயத்தில் பிரமன் அஸ்வமேதத்துக்குவருமிடையூரகற்றிமுடிவுபெறச்செய்யப் பிரார்த்தித்துக்கொண்ட வலம்புரி விநாயகராலயம், அதற்கு (௧) அம்சம் கிழக்கில் சுப்பிரமணியராலயம், அதற்கு (௨) அம்சம் தக்ஷிணத்தில் யாகத்துக்குக் காவலாக வேண்டிக்கொண்ட பாஞ்சாலிகை ஆலயம், அதற்கு (௧௬) அம்சம் வாயுவில் க்ஷேத்திராங்கி ஆலயம், (இக்கான்காலயத்துக்குட்பட்ட பிரதேசம் பிரமன் அஸ்வமேதத்திற்குக் கொண்டுவந்தகுதிரையைக்களவினுற் கொண்டுபோன குதிரைமுகமுடைய ஹயாசுரனைக்கொன்று அஸ்வமேதஞ்செய்தற்கிடமாகிய பிரமாஸ்வமேதசாலை எனப்படும்,) அதற்கு (௧௦) அம்

சம் தெற்கில் விஷ்ணு மூர்த்தியை யாராதித்து அவர்பாற் சங்கிளைப் பெற்ற கம்புதாரிணி ஆலயம், அதற்கு (சஅ) அம்சம் ஆக்னேயத்தில் சோமயாகத்தி லுற்பத்தியான குதிரையைப் பலிகொண்ட கிராமதேவதையாகிய பாணும்பிகை ஆலயம்,—அதற்கு (ச) அம்சம் தெற்கில் புண்ணியகோடீஸ்வர ராலயம், அதற்கு (கூ) அம்சம் வாயுதிக்கில் பிரமதேவனியற்றிய அஸ்வமேதத்தில் "உத்காதா" என்னும் ருத்விக்கர்மத்தை வஹித்த மணிகண்டேஸ்வரராலயம், அதற்கு (க0) அம்சம் வடக்கில் கவுதமரால் சரீரமுற்றும் யோனியாகப்பெற்ற சாபத்தைப் போக்கிக்கொள்ளும் பொருட்டு இந்திரன் பூசித்த சத்தியநாதேஸ்வர ராலயம், அதற்கு (கஉ) அம்சம் தெற்கில் சரஸ்வதியின் கர்வத்தை யடக்கும்பொருட்டு நிர்வாணியாய்ச் சயனித்துக்கொண்டிருக்கும் யதோத்காரி என்னும் விஷ்ணுவாலயம், அதற்கு (ரு) அம்சம் அக்னியில் இந்திரனுடைய மார்பில் வீற்றிருக்கும் நரசிம்ஹராலயம், அதற்கு (ரு) அம்சம் நிருதியில் மாயை என்னும் காளியோடு போர்செய்து அவளைக் கீழேதள்ளி சிரசின்மேல் வீற்றிருக்கும் அஷ்டபுஜ ரென்னும் விஷ்ணு ஆலயம், அதற்கு (ரு) அம்சம் வாயுவில் சரஸ்வதியின் மானத்தைக் காப்பாற்றிய வித்யாகுண்டரென்னும் விஷ்ணுவாலயம், அதற்கு (ரு) அம்சம் தெற்கில் காபாலிகையைக்கொன்று அவளால் விடப்பட்ட அஸ்திரங்களை யெல்லாம் விழுங்கி ஜீர்ணமாக்கிக்கொண்ட வயிற்றேடுகூடிய நரசிம்ஹராலயம், அதற்கு (எ) அம்சம் வடக்கில் முன்மாயா நலன் என்பவனைக் கொன்று அவனைத்

தீபம்போல் கரத்திலேந்திக்கொண்டிருக்கிற தீபப்பிரகாச விஷ்ணு ஆலயம், அதற்கு (உக) அம்சம் குபேரதிக்கில் துண்டீர ராஜனுக்கு வைகுண்டத்தைக் காண்பித்த வைகுண்டாலயம் அதற்கு (ரு) அம்சம் குபேர திக்கில் முன் அசுரர்களுடைய ரக்தங்களைப் பானஞ்செய்து அதனால் பவழப் போலும் செந்நிறத்தையடைந்த பவளவண்ணராலயம், அதற்கு (சக) அம்சம் அக்னிதிக்கில் அளவில்லாத புஷ்பங்களைக்கொடுத்துச்சந்தோஷம் வரும்படிசெய்தபூமிதேவியைக் கலியாணஞ்செய்துகொண்ட சதுர்ப்புஜப்பெருமாளாலயம், அதற்கு (க) அம்சம் கிழக்கில் பல்லிகளாலயம், அதற்கு (க) அம்சம் தெற்கில் முன்தேவசில்பியினால் நிர்மிக்கப்பட்ட படிகளாயுள்ள இருபத்துநாலு சோபானங்கள். அதற்கு (க) அம்சம் மேற்கில் இலக்ஷிமி தேவியானவள் தன்னை விஷ்ணுமூர்த்தி கலியாணஞ் செய்துகொள்ள அவருடைய அர்த்தாசனத்தில் வீற்றிருக்கும் இலக்ஷிமிதேவி ஆலயம்,—அதற்கு (க) அம்சம் ஈசானத்தில் விஷ்ணுவின் விவாகத்தின் பொருட்டு இந்திரனால்அனுப்பப்பட்ட புண்ணியகோடிவிமானம், அதற்கு (உ) அம்சம் ஈசானதிக்கில் முன் ஆதிசேடன் ஸ்நானஞ்செய்து பூமியைத்தாங்கும் வல்லமையடைந்த அநந்தசரசும், அதற்கு(உ)அம்சம் வாயுவில்சர்வபாவங்களையும் போக்க வல்ல பக்தோதயசரசும், அதற்கு (ங) அம்சம்வடக்கில் இந்திரதீர்த்தமும், இதற்கு (உஞ) அம்சம் காளிகாதேவியின் பொருட்டு விஷ்ணுவினுடைய சக்கிரத்தினால் உண்டாக்கப்பட்ட சுதரிசனமென்னும் பெயருடைய பாஞ்சாலிகா தீர்த்தம்.

தீர்த்தபலன்,—அநங்கதீர்த்தத்தில் சனிவாரத்தில்ஸ்நானஞ் செய்வோர்க்கு விஷ்ணுபதமும்,—பக்தோதயதீர்த்தத்தில் ஏகாதசி திதியில் ஸ்நானஞ் செய்வோர்க்குத் திருப்பாற்கடலில் ஸ்நானஞ் செய்த பலமும், இந்திரதீர்த்தத்தில் புதவாரத்தில் ஸ்நானஞ் செய்வோர்க்கு யமுனாநதிஸ்நானபலமும் இந்திர பதமும்,—பாஞ்சாலிகாதீர்த்தத்தில் திருவோணம், கேட்டை, நக்ஷத்திரங்களில் ஸ்நானஞ்செய்தால் விரஜாநதியில் ஸ்நானஞ் செய்த பலமுஞ் சகலஐஸ்வர்யமுமுண்டாகும்.

இப்பூவைகுண்டத்தில் வசிப்பவர் விஷ்ணு பதத்தையடைவர் இதிற் சந்தேகமில்லை.

மகிமை,—சிந்துதீரத்தில் வசிஷ்டகோத்ரஜனும் ருக்வேதியனுமானகர்க்கிரி என்னும் ஒரு பிராமணனிருந்தனன். அவன் நித்யகர்மமான சந்தியாவந்தனாதிகளையும், பிதுர்க்கர்மாதிகளையுங்கைவிட்டு, பிறர்பொருளைக்கவர்வதிலும், பரதாரகமனத்திலும், எப்பொழுதும் பிறர் போசனத்தையே விரும்புவதிலும், ஏனைய பாபச்செய்கைகளைச் செய்வதிலும் மனமூக்கமுடையவனாயும்,சாமார்த்தியமுடையவனாயுமிருந்தனன்.இப்பதிதன் சித்திரைமாதத்தில் மார்க்கத்திலுள்ள நெல்லிமரங்களிலேறி அக்கனிகளைப்பறித்து அவைகளைவிற்றுச் சீவஞ்னசெய்துபாணகுண்டமென்னுமூரில்வாழ்ந்திருந்தனன் ஒருநாள் காஞ்சிநகரத்தைநோக்கி ஹரிக்ஷேத்திரமார்க்கமாகச்செல்லும்பொழுது அம் மார்க்கத்தில் ஒரு பிராமணன் மிகுந்த தாகத்தோடு போவதைப் பார்த்து ஒ பிராமணரே ! நீர்தாகத்தோடு போவதாய்த்தெரிகின்றது, ஆகையால் நான் நெல்லிக்கனிதரு

கின்றேன் அதைத்தின்பீரானல் தாகந்தீருமென்று ஒரு பிடி யளவு நெல்லிக்கனியைத்தந்து இதோஓர் தடாகமிருக்கின்றது என்றுதடாகத்தைத் சுட்டிகாட்டித் தான் தன்னூருக்குச்சென் றனன். நெல்லிக்கனிபெற்ற பிராமணன் அக்கனியை யுண்டு தடாகத்தில்தண்ணீரையும்பருகித்தாகந்தணியப் பெற்றனன்:

சிலகாலங்கழித்து நெல்லிக்கனிதந்தஅந்தப் பிராமணன் மரணமடைந்தனன். அவனைக்காலதூதர்கள் சமீபத்துகொண் டுபோவதற்கு நடுங்கினவர்களாய் இவன் மஹாபாவி என்று பேரொலியிட்டு என்செய்வோமென்றேங்கினவர்களாய்க்கால பாசத்தாற் கட்டித் தண்டால் அடித்தடித்து யமலோகத்துக் குக் கொண்டு போய்விட்டனர். அப்பொழுது விஷ்ணு தூதர் கள் வந்து யமதூதர்களைத் தண்டித்து இந்த புண்ணியசாலி யை நீங்களடிக்கவும் பாசத்தாற் கட்டவுமாயிற்றோ இது நன் ருயிருந்தது என்று அவனைக்கட்டியபாசத்தை யவிழ்த்து புஷ்பவிமானத்திலேற்றி உபசாரமரியாதைகளோடும் பரம பதங்கொண்டுபோய் நாராயணரிடத்தில் விட்டனர்.

இச்செய்தியை இயமனறிந்து வைகுண்டத்துக்கு போய் நாராயணமூர்த்தியைக்கண்டுஇந்தப்பிராமணன் என்ன புண்ணியஞ் செய்தனன். இவன் செய்ததெல்லாம் பாவமே ஆகையால்என்லோகத்தில்என்வசமாயிருக்கத்தக்கவன்என்று கூற, நாராயணன் இயமனைப்பார்த்து காஞ்சி க்ஷேத்திரத்தில் ஆக்னேயதிக்கிலுள்ள பூலோகவைகுண்டத்தில் இந்தப் பிரா மணன் ஒருபுண்ணியஞ் செய்தனன். அவ்வொன்றனந்தமாய் அவன்செய்த பாபங்களை யெல்லாம் போக்கி இந்த வைகுண்

டத்துக்குவரும்புண்ணியசீலர்களுள் ஒருவனுக்கியது. அவன் செய்த புண்ணியம் என்னையெனின் முன்சொல்லிய என் க்ஷேத்திரத்தில் ஒருபிராமணன் தாகத்தோடு செல்லும் பொழுது அவன்தாகந் தணிவதற்குத் தான் வியாபாரஞ்செய் வதற்கு வைத்திருந்த நெல்லிக்கனியிற் சிலகொடுத்து ஓர் தடாகத்தையுங்காட்டினன், பின் அந்தப்பிராமணன் உண்ட கனியும் பானம்செய்த நீரும் எனக்கே அர்ப்பணமாயிற்று. ஏனென்றால் அந்தவிடத்தில் வசிப்பவரெல்லாம் யானேயன்றி வேறில்லை. இனிநீவந்தவழியைப் பார்த்துக்கொண்டேகலாம் என்றுகூற இயமன் பயந்து நாராயணரையும் அந்தப்பிரா மணனையும் பலமுறையும் வணங்கி என்னால் நேரிட்ட அபரா தத்தைப் பொறுத்தருளல்வேண்டுமென்று பிரார்த்தித்துக் கொண்டு தன்னுடையஉலகம்போய்ச் சேர்ந்தனன்.

இரண்டாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## மூன்றாவது அத்யாயம்.

### அஸ்திகிரிப்பிரபாவம்.

புண்யகோடிகள்வசிப்பதனால் புண்யகோடிஎனப்பெயர் பெற்ற அஸ்திகிரியானது பாஞ்சாலிகை என்னுந் தீர்த்தத் திற்கு (உ) அம்சம் வாயுதிக்கிலிருப்பது. அவ்விஷ்ணு க்ஷேத்திரத்திற்கு அலங்காரமாகஉள்ள இந்த கிரி முன்னொரு காலத்தில் இந்திரன்சாபத்தாலடைந்த யானையுருவமாதலால்

அத்திகிரி எனப் பெயர்பெற்றது - அஸ்திகிரீ வரலாறு.
சரஸ்வதிதேவி (சுசு) வித்தைகளுக்குந் தான் மூலகாரணியாயிருப்பதனால் இவ்வுலகத்துள் நாமே சிறந்தவள் நமக்குச்சமானவர் இங்கொருவருமில்லை என்று ஒருவரையுமதியாது இறுமாந்து உலாவிவந்தனள். இத்தேவியைப்போலவே, இலக்ஷிமி தேவியும் சகல பாக்கியங்களுக்குந் தான்மூலகாரணியாயிருப்பதனால் நாமே சிறந்தவள் நமக்குச்சமானமானவர் எவ்வுலகிலுமில்லை என்று ஒருவரையுமதிக்காது இறுமாந்து உலாவிவந்தனள். இவ்விருவரும் ஓர்கால் சந்தித்து அவருள் இலக்ஷமிதேவி, சரஸ்வதிதேவியைப்பார்த்து இறுமாந்துவருகின்றனையே உனக்கு என்னபெருமையிருக்கின்றது நீ என்முன் இப்படியும் வரலாமோவென்று கூறினள். அதுபோலவே சரஸ்வதிதேவியும் இலக்ஷிமிதேவியைப் பார்த்துக்கூறினள். பின் இருவருக்கும் பெருங்கலகம் விளைந்து சுவர்க்கலோகமடைந்து இந்திரனைப்பார்த்து, இந்திரனே ! எங்களிருவருள்யார் சிறந்தவள் நீ நியாயவிரோதமின்றி நடுவுநிலைமையாய் கூறுவாயென்றனர். இந்திரன் சரஸ்வதிதேவியைப்பார்த்து, சகலகலாவல்லி இலக்ஷிமிதேவி மண்ணுலகத்தாருக்கும் விண்ணுலகத்தாருக்கும் சகல சம்பத்தையுங்கொடுக்குந் தெய்வமாயிருக்கின்றாள். அன்றியும் விஷ்ணுமூர்த்திக்குப் பத்தினி, உனக்கு மாமி, உலகத்தாருக்குத் தாய், ஆகையால் இச்செந்தாமரையாளே சிறந்தவள் என்றனன். அதுகேட்ட வெண்டாமரையாள் மிகவுங்கோபங்கொண்டு நீ நியாயவிரோதமாய்க் கூறினமையால் நானிடுஞ்

சாபத்துக்குள்ளாவாய், உனதாரம்பத்தை நிலைநிறுத்திக்கொள்வதற்கல்லவா இப்போழுது இலக்ஷிமியைச் சிறப்பாகக்கூறினை நியாயமறியாதவுயன்னிடம் யான் வந்தது என்னறியாமையே எனக்கூறித்தன் மனத்தில் இதனை எண்ணுகின்றனள். இவ்விந்திரன் மிக அகங்காரனும் துஷ்டசித்தமுடையவனும் முழுமூடனும் இருக்கின்றான். இவனை இப்படியாக்கியது இவன் படைத்திருக்கும் தனகர்வமே என்றெண்ணி இவனை எவ்விதத்திலாவது நமது சாபத்துக்குள்ளாக்கவேண்டியதென்றாலோசித்து இந்திரனைநோக்கி, ஓ! இந்திரா நீ பெற்றிருக்கும் ஐஸ்வரியமதத்தினால் என்னைச்சிறந்தளென்று கூறுவதற்கு நாவெழாமற்போயிற்று. ஆனபடியினால் மதமுடைய யானையாகக்கடவாயென்று சபித்துப்போயினள். அது கேட்ட, இலக்ஷிமி தேவி இந்திரனைப் பார்த்து நீ கூறியது நியாயமே, அவள்சாபமிட்டது அநியாயமே, ஆயினும் அச்சாபந்தீரும் உபாயமொன்றைக்கூறுகின்றேன். என்னையெனின், வரதராஜர் வீற்றிருக்கும் ஹரிக்ஷேத்திரத்தை யடையப்பெறுவையானால் இந்தயானைவடிவம்நீங்கும். நீ அந்த ஹரிக்ஷேத்திரத்தை யடைவதற்கோருபாயங் கூறுகின்றேன். பூலோகத்தில் சிம்ஹாசலமென்று ஒரு பர்வதமிருக்கின்றது. அப்பர்வதத்திற்குச் சமீபத்தில் தண்டகாரண்யமென்றொரு ஆரண்யமுளது, அவ்வாரண்யத்தில் விஷ்ணு பக்தனான பிரகலாதனென்பவனொருவனிருக்கின்றான். அவனிடத்தில் நீ சென்று (௩௨) எழுத்தோடு கூடிய நரசிம்ஹ மந்திரத்தைஉபதேசமுறையாகக் கேட்டு ஏகாக்ரசித்தனாய்த் தியானஞ் செய்வையாயின் பூர்வஞ்ஞானமும் வரதராஜக்ஷேத்திரத்தையடை

யும் புண்ணியமும் வன்மையும் பெற்று அந்த ஹரிக்ஷேத்திரத்தை யடைந்து நரசிம்மமூர்த்தியினால் கஜவடிவம் நீங்கப் பெறுவாயென்று அனுக்ரஹஞ் செய்து சென்றனள். அவ்வாறே யானைவடிவமடைந்த இந்திரன் காஞ்சியில் ஹரிக்ஷேத்திரைத்தயடைந்து நரசிம்மமூர்த்தியைத் தியானஞ் செய்துவந்தனன்; நரசிம்மர் கருணைகூர்ந்து வெளிப்பட்டு அந்த கஜரூபத்தைத் தனது கைகளால் இரண்டாகப்பிளந்தனர். உடனே இந்திரன் சாபத்தினின்று நீங்கித் தன்னுருவத்தைப் பெற்றுச் சென்றனன். நரசிம்மமூர்த்தி இந்திரனுடைய அந்த கஜரூபத்தைப் பர்வதமாக அனுக்கிரகஞ்செய்து கிழித்த இருதயமாகிய விடத்தைக் குகையாகக்கொண்டு அதில் யோகிகளைப்போல் யோகாசனாரூடராய் வீற்றிருந்ததனால் குஹாநரசிம்ஹரெனப் பெயர் பெற்று விளங்குகின்றனர். வரதராஜமூர்த்தியும் அந்தயானைவடிவாகியமலையின்மேல் வீற்றிருத்தலால் அஸ்தகிரிநாதரென்று பெயர் பெற்றனர், அம்மலையும் அஸ்தகிரி எனப் பெயர் பெற்றது.

இந்திரன் நரசிம்ஹமூர்த்தியினால் சாப விமோசன முண்டாய்ச் செல்லும்பொழுது அஸ்தகிரியினின்றும் இரண்டுசிறு பிள்ளைகள் வரக்கண்டனன். அவ்விருவரும் அதிசுந்தரமுடையவர்களாயும் வேதசாரம் பிழம்பாய்த்திரண்டிருப்பதுபோல் பொலிவுபெற்றிருக்குந் திருமுகமண்டல முடையவர்களாயும் இருப்பதைபார்த்து அதிசயித்து அவர்களை நோக்கி ஓ! சிறுவர்களே? நீங்கள்யாவர் ? உங்களாச்சிரமமெது ; இவ்வழியாய் வருங்காரணமென்னை ? இம்மலையில் எப்பொழுது ஏறினீர் ?

இதையெனக்குத்தெரிவியுங்களென்றனன். ஐயா! நாங்கள்சிருங்கிபேருடைய பிள்ளைகள், எங்கள்குலம்-பிராமணகுலம், எங்களுக்குப்பெயர் ஹேமன், சுக்லன், எங்கள்கோத்திரம்: சாண்டில்யகோத்திரம், எங்கள்சூத்திரம்: வைகானசூத்திரம், எங்கள்ஆச்சிரமம் பிரமசாரியாச்சிரமம், எங்கள் ஆசாரியர்: கௌதமமுனிவர், யாங்கள் வியாகரணசூத்திரங்களிலும் மீமாம்ஸா சாஸ்திரங்களிலும் வல்லவர்கள். இதுவரையில் எங்கள்மரபு முதலியவற்றைக்கூறினோம்,

இனி இங்குவந்ததற்குக் காரணங்கூறுகின்றோம். கொங்கணதேசத்தில் எங்களாசிரியருடைய ஆஸ்ரமம், அவர்விஷ்ணுமூர்த்தியின் பூஜை நிமித்தம் எங்களைப்பார்த்து தீர்த்தமும் சமித்துங்கொண்டு வரும்படிக் கட்டளையிட்டனர், யாங்கள் அவர்கட்டளைப்படி ஓர்சுத்த பாத்திரத்தில் தீர்த்தத்தை நிரப்பிப் பரிசுத்தமான விடத்தில் மூடாமல்வைத்துவிட்டுச் சமித்துக்காக ஓர்மரத்தின் மேலேறி சமித்துக்களை யொடித்துக்கொண்டு கீழிறங்கி தீர்த்தத்தையும் எடுத்துக் கொண்டுஆச்சிரமத்தை யடைந்து ஆசிரியர் முன்தீர்த்தத்தை வைத்தோம், அப்பொழுது அத்தீர்த்தத்தினின்றும் ஒரு சிறியபல்லி துள்ளி வெளியே விழுந்தது. நாங்கள் தீர்த்தத்தைமூடாமற்கொண்டுவந்து வைத்ததையும் அதினின்றும் பல்லி வெளியே குதித்ததையும் ஆசிரியர்கண்டு அறிவிலிகளே! என்ன காரியஞ்செய்தீர்கள் நீங்கள் தீர்த்தத்தை மூடாமல்வைத்தபடியினலல்லவா அதிற் பல்லி விழுந்தது, இனி இத்தீர்த்தம் பூஜைக்காகாது. நீங்களும் விக்கினஞ் செய்தவராவீர்கள் என்று கோபித்து பல்லிகளாகப் போகக்கடவீர்கள் என்றுசபித்தனர்.

இந்திரனே! நாங்கள் அச்சாபத்தை யேற்றவர்களாய் வரதருஜர் வீற்றிருக்கின்ற இந்தமலையருகிலுள்ள விருஷத்தில் பல்லிகளாய் வாழ்ந்திருந்தோம். உன்னுடைய கஜரூபத்தை நரசிம்ஹமூர்த்தி பிளக்கின்றகாலத்தில் உன் துதிக்கையினல் நாங்கள் வாழ்ந்திருந்த மரத்தை முறித்தனை, அப்பொழுது இந்த அஸ்தகிரியினுடை பின்பாகத்திற் குதித்தோம் உடனேசாபம் நீங்கப்பெற்று வருகின்றேமென்று சொல்லித் தங்களிருப்பிடம் போய்ச்சேர்ந்தனர்.

அதுகேட்ட இந்திரன்மகிழ்ந்து அந்தச்சிறுவர்களுடைய இரண்டு பல்லியுருவங்களையும் கையினுற்றடவி அவர்கள் பெயர் விளங்கப்பொன்னுலும் வெள்ளியினுலுமமைத்து மேலே பிரதிஷ்டைசெய்து, இவ்விடத்தில் இவ்விரண்டு பல்லிகளையும் கையினுற் பரிசித்து இவ்விடத்திற்றனே நின்று யாரொருவர் இந்த ஹஸ்தகிரியைத் தரிசனஞ் செய்கின்றூர்களோ அவர்கள் ஏகாதசியில் அகோராத்திரம் ஹரி நாம சங்கீர்த்தனஞ் செய்தடையும் விரதபலனையும் அஸ்திகிரியை தரிசிக்கப்பெற்றவர்களுக்கும் பரமபதத்தையும் அடையக்கடவர் என்று வரமளித்துச் சென்றனன்.

பூர்வத்தில் சரயூ நதிக்கரையில் வசிக்கும் ப்ரத்துவாச குலத்திற் பிறந்த சுக்லவேதியனுன கணு என்னும் பிராமணனெருவன் சகலசாஸ்திர சம்பன்னனுய் தனுர்வித்தையிற்சிறந்தவனுய்ப் பிராமணவேடத்திற் சிறிதுங் குறைவில்லாதவனுயிருந்தனன், அவன் பூர்வகர்ம வசத்தால் பாவகர்மத்திலாசையுடையவனுய் எப்பொழுதும் யாத்திரை செய்வதிலேயே மிக

விருப்புடையவன்போல் யாவருக்கும் புலப்படுத்தி யாத்திரார்த்தமாய்ச் செல்பவரோடு தானுஞ்சென்று மலைவனம் துர்க்கம் முதலிய மறைவான விடங்களிற்போகுங்கால் தான்கற்றிருக்கும் வில்வித்தையுமுடைய சாமர்த்தியத்தினல் ஒருவரையும் விடாதுகொன்று அவர் கைப்பொருள்களைகொள்ளை கொண்டு தன்னிடஞ்சென்று மனைவி மக்களுடன் வாழ்ந்திருந்தனன். ஓர் நாள்இவன் முன்போல் யாத்திரவாசிகளைக் கொலைசெய்கின்றபொழுது அவர்களில் நைமிசாரண்யவாசியானஒரு வீரனிருந்தனன். அவ்வீரன் இவ்வேதியன் செய்கையைக் கண்டு மனம் புழுங்கிஅவனை பிடித்திறுகக் கட்டி நீ என்செய்கின்றாய்? இந்தக்கொலைதொழிற்கா இந்தப் பிராமண வேடமென்று அவனையிகழ்ந்து கூறி நீ கொலைத்தொழில் பூண்டவனாயினும் பிராமண குலத்திற் பிறந்தவனாதலால்உன்னைக்கொலைசெய்தல் பழுதென்றுகூறி ஓர் கத்தியை எடுத்து அவனது யக்ஞோப வீதத்தையும் சிகையும் அறுத்துப்பின் அவனைக் கட்டியகட்டவிழ்த்து இவ்வழியே யோடிப்போவாய் இனி இவ்வழிஒருபொழுதுந் திரும்பாதே என்றச்சமுறுத்தி ஒட்டிவிட்டனன். அந்தப் பிராமணன் அவனிறுக்கிய இறுக்கினல் சரீரம்புண்பட்டு ஓடிப்போவதற்கு முடியாமல் பைய்ப்பைய நகர்ந்து தக்கோலம் என்கிறவூரை யடையும்பொழுது பூர்வபுண்யவசத்தால் இந்த அஸ்திகிரியைக்கண்டு மரணமடைந்தனன். அந்த அத்தி கிரியினுடைய தெரிசன விசேடத்தால் விஷ்ணுலோகம் போய்ச் சேர்ந்தனன்,

மூன்றுவது அத்தியாயம் முற்றிற்று.

## நான்காவது அத்தியாயம்.



### வரதராஜ மூர்த்தி வரலாறு.

சங்கு சக்ரகதா தாரியாய் ஸ்யாமள வர்ணராய் சர்வாபரண பூஷிதராய் நீலமணிபோற் சுந்தரராய் செந்தாமரைக் கண்ணராய் ஸ்ரீ வத்ஸனராய் இரத்னகர்ப்பராய் கிரீடகுண்டலதாரியாய்ச் சவ்யவாம பாகங்களில் ரமாபூமியாகிய மங்கையரிருவர் சாமரைகளசைக்கப் புண்ணியகோடி விமானத்தில் வீற்றிருந்து பிரமனுக்கும் தனது பக்த ஜனங்களுக்கும் சர்வா பீஷ்டங்களையுங் கொடுக்கும் வரதராஜமூர்த்தி பிரமனுக்குச் சிருட்டி தண்டங்கொடுத்த வரலாற்றைக் கூறுகின்றேன்.

தான்தான் சிறந்தவளென்று வாதாடி முன் சென்ற சரஸ்வதி இலக்குமியாகிய அவ்விருதேவியரும் அவ்வளவி லொழியாது மீளவுங் குரோதத்தையே மேற்கொண்டு பிரமனிடஞ் சென்று எங்களிற் சிறந்தவள் யாவள் என்று கேட்டனர். பிரமனும் இந்திரனைப்போலவே இலக்ஷுமியே சிறந்தவளென்று கூறினன். அதுகேட்ட சரஸ்வதி கோபமடைந்து இந்திரனைச் சபித்தோம் இவர் கணவராயிருப்பதால் சபிக்கலாகாதென் றெண்ணிப் பிரமதேவன் கையிலிருக்கும் விஷ்ணு மூர்த்தியினால் கொடுக்கப்பட்ட தன்னம் சமாகியசிருட்டி தண்டத்தைப் பிடுங்கித் தன் சரீரத்தி லொடுக்கிக்கொண்டு அவ்விடத்தில் இல்லாமற் சென்றனள்.

பிரமனுக்குப் பின் சிருட்டி செய்யும் வன்மை யற்றுப் போகவே சர்வ சராசரங்களுந் தோன்றுதலிலலாயின. அது

கண்ட பிரமன் சிந்தாகுலமடைந்து நம்முடைய பத்தினி என்னசெய்தாள்! நாம்வைத்திருந்த தண்டம் அவளுடைய அம்சமாயிருந்தபடியினலல்லவா அதனைப் பிடுங்கிக் கொண்டனள், ஆயினும் அத்தண்டத்தைக் கொடுத்தவள் இவளல்லவே. விஷ்ணுமூர்த்தியலல்வா நமக்குக்கொடுத்தவர் அதனையவற்பாற் பெறுவோம் என்றெண்ணி இனி இந்தச் சரஸ்வதியால் நமக்காவதென்னை? அவளுடைய முகத்தையும் பார்க்கக்கூடாதென்று குரோதங்கொண்டு இமயமலையையடைந்து விஷ்ணுமூர்த்தியை நோக்கித் தவஞ்செய்து வந்தனன்.

விஷ்ணுமூர்த்தி இவனது தவத்துக்கிரங்கிப் பிரசன்னராய்ப் பிரமனே! யாது வேண்டித் தவஞ் செய்கின்றனை? என்று வினவ, பிரமன் என்றந்தையே! சிருட்டி நிமித்தம் உம்மால் கொடுக்கப்பட்ட தண்டத்தை வாணி தன் வன்மையால் அபகரித்து கொண்டனள். அதுமுதல் சிருட்டித் தொழில் நின்று விட்டது. இனி அத்தண்டமின்றி எவ்வாறு சிருட்டிசெய்வேனென்றனன். திருமால் நீ நூறு அஸ்வமேதம் இளாவிருத கண்டத்திற் செய்வையாயின் அத்தண்டங் கிடைக்கும். அங்கு நூறு செய்ய முடியாதாயின், நூறு அஸ்வமேதப்பலனை ஒரு அஸ்வமேதஞ் செய்வதினலேயே யடையக் கூடுமான ஒருக்ஷேத்திர மிருக்கின்றது, அது காஞ்சியாம். அவ்விடத்திற் சென்று உத்தமோத்தமமாகிய அத்திகிரியின் முன்பிரதேசத்திலிருந்து ஒரு அஸ்வமேதஞ் செய்தால் இளாவிருதகண்டத்தில் நூறு அஸ்வமேதஞ் செய்த பலனுண்டாகும் இதிற் சந்தேகமில்லை. ஆகையால் அஸ்

வமேதம் நூறுவது ஒன்றுவது முன்குறித்த விடங்களிற் செய்வாயாகில் அந்த ஓம குண்டத்தில் நான் வெளிப்பட்டு வந்து சிருட்டி தண்டந் தருகின்றேன். இதிலையமில்லை என்று அனுக்கிரகஞ் செய்து மறைந்து போயினர்.

பிரமன் மகிழ்ந்து அதிகவிரைவாய் அத்திகிரியையடைந்து அத்திகிரிக்கு, மேற்பக்கத்தில் நரசிம்ஹருடைய சந்நிதியில், தேவசில்பியைக் கொண்டு விதிப்படி யாக குண்டமமைத்து ஒரு வருடஞ் செய்யத்தக்க இந்தயாகம் நிர்விக்கினமாய் நிறைவேறவேண்டுமென்று விக்னேஸ்வரப் பிரார்த்தனை செய்து விதிமுறையாக அந்தயாகத்துக் குரிய லக்ஷண மமைந்துள்ள அஸ்வத்தைக்கொண்டு வந்து அபிஷேக அலங்காரங்கள் செய்து நீலமாயும் சுவர்ணமயமாயு முள்ள வஸ்திரங்களால் அலங்கரித்து அதன்மத்தகத்தில் பொன் பட்டங்கட்டி நேத்திர படந்தரித்து யதேச்சையாகப் போகும்படிச் செய்து யக்ஷ கந்தர்வ ராக்ஷசர்களால் யாதொரு தீங்கும் வரா வண்ணங்காத்து அதனை மீட்டுக்கொண்டுவரச் செய்து யாக சாலையிலுள்ள யூபஸ்தம்பத்தி கட்டி அதன் காதில் "தத்சக்ஷுஸு" என்னும் மந்திரத்தினால் நேத்திர படத்தை யவிழ்த்து தன்னுடைய பீடத்தில் தர்ம பத்தினியை ஆவாகித்துக் கொண்டு பின்னர் சுப்பிரமணியக்கடவுளைச் சாதகராகவும், மணிகண்டீசரை உத்காதாவாகவும், வருணனைச் சோமமாகவும்,எமதர்மராஜனைச் சஸ்தரமாகவும், சாதான் ஹீகரைப் பௌரோகிதராகவும், இருடிகள் முதலான தேவகந்தர்வ யக்ஷ கின்னர அப்சர சித்தசாத்யர்களை ஏனைய தொழில்களுக்காகவும், கணு

த்யக்ஷர் க்ஷேத்திரபாலகர் யோக சிம்ஹர் முதலியோரை யாக ரக்ஷார்த்தமாகவும் அந்தந்த ஸ்தானங்களில் அவரவரை யேற்படுத்திக்கொண்டு யாகஞ் செய்ய எத்தனித்து "ஷட் பர்யிவாம்சகை:" என்ப தாதி மந்திரங்களால் கவாஸ்தானங்க ளாகிய ஷடங்கங்களில் அவ்வவ் வங்க தேவதைகளைப்பூசித்து ஓமஞ் செய்யத் தொடங்கினன்.

இச்செய்தியைச் சரஸ்வதி தேவியறிந்து பத்தினி யுக்த மாகச் செய்யவேண்டிய யாகத்தைப் பத்னியில்லாமலே செய் யத்துணிந்ததுமிக நன்று, இவ்விதியை எங்குக் கண்டனர்! இதுதானே இவர் விதியென்று பெயர் படைத்ததற்கு லக்ஷ ணம்! இதுயாருடைய கற்பனையோ! என்று பலவாருக வெ ண்ணி அடங்காதகுரோதங்கொண்டு ஆ! ஆ! இவரை விட் டேனு! யாகத்தை முடிக்கச்செய்வேனு!! அப்படி முடிக்கச் செய்ய விடுவேனுயின் நானுங் கலைமங்கை யாவேனு! என்று பல வீரமொழிகள்பேசி மஹாகோபங் கொண்டு தனது மா யையினுல் அளவிடப்படாத அக்னியை யுண்டாக்கி பிரமன் யாகசாலைக்கேவினள். அதுகண்ட விஷ்ணுமூர்த்தி அத்தீயைஓர் கையில் தீபம் போலேந்திக்கொண்டு தீப்பிரகாசராயினர். பின் கபாலாஸ்திரத்தைப் பிரயோகஞ் செய்ய அதனைச் சிம்ஹ ரூப மாய்ப் பக்ஷித்து நரசிம்ஹராயினர். அதன்பின் அனேக அசு ரர்களையேவ அவர்களைக்கொன்று உதிரபானஞ் செய்து செந் நிறமடைந்து பவளவண்ணராயினர். அதன்பின்னேவிய காளி யைத்தனது எட்டுத் திருக்கரங்களாலும் பிடித்திறுக்கிப் பூமியிற்றள்ளி அவள் சிரசின்மேல் அட்டகாசமாய் வீற்றி

ருந்து அஷ்டபுஜராயினர், பின்னர் சரஸ்வதி தன்னால் விடப்பட்ட யாவும் யாவரும் விஷ்ணு மூர்த்தியினால் பாழ் படக்கண்டு இனிநாமே செல்வோம் இந்தவிஷ்ணு என் செய்வார் பார்ப்போ மென்றெண்ணி, முன், மஹாதேவியை வெருட்ட அதிகவேகமாய்ப் பெரும் வெள்ளங் கொண்டு வந்த கம்பைநதியும், நந்திமலையினின்றும் பெருவெள்ளமா ய்ப் பெருக்கெடுத்து சமுத்திர சங்கமமாவதற்குச் சென்ற க்ஷீரநதியும் இப்பொழுதுஒன்றாகத்திரண்டு வருவதென் றெண்ணுமாறு மஹாப் பிரளயத் தோடும் அதிகவேகமாய் யாகசாலையை நோக்கிவந்தனள். அதுகண்ட விஷ்ணுமூர் த்தி இவ்வெள்ளம் சாக்ஷாத் சரஸ்வதியென்றே அறிந்து இவளைச் சுலபமாய் வென்றுவிட வேண்டுமென் றெண்ணி னவராய் அவ்வெள்ளம்வரும் வழியிடையே நிர்வாணியாய்க் குறுக்கே நன்றாய் கைகால்களை விரித்துப் படுத்துக் கொண் டனர். அவ் வலங்கோலத்தை வெள்ளரூபமாய் வருகின்ற சர ஸ்வதிகண்டு இப்படியுஞ் செய்வாருண்டோ ! இதுவா ஆண் பிள்ளைத்தனம் ! இவர்தான் ஆண்பிள்ளைத் தன்மையை விட் டாலும் நாம் பெண்தன்மையை விடலாமா வென்று நாணங் கொண்டு அவ்வழிச்செல்லாது பிலத்தை யடைந்தனள்.

அக்காலம் சுவேதவராக கல்பம் கிருதயுகம் ஐந்தாவது மன்வந்தரம் யுவவருஷம் விருஷபமாசம் மேஷத்தில் சூரி யனிருக்கிற காலம் சுக்ல பக்ஷ சதுர்த்தசி அஸ்த நக்ஷத்திரங் கூடிய சுபதினம் உடனே பிரமன் பூமியில் தண்டாகாரமாக விழுந்து அஞ்சலியஸ்தனாய் நின்று சிருட்டி தண்டத்தை

அவரால் கொடுத்தருளப் பெற்றுக்கொண்டு தேகபரவசனாய் ஒருமுகூர்த்தகாலம் நின்றனன். அதற்குள் இந்திரன் விஸ்வ கர்மாவினால் அந்த அத்திகிரியில் இருபத்து நாலு படிகளை யும் அதன் மேல் ஓர் புண்ணிய விமான ஆலயமமைத்த னன். தேகபரவசனாய் நின்ற பிரமன் கண்களை விழித்துப் பார்க்க அந்த வரதராஜமூர்த்தி புண்ணியகோடி விமானரூட ராய்க் காக்ஷி கொடுக்கக்கண்டு முன்போல் பரவசமுற்று வர தராஜருடைய ஸ்ரீபாதத்தில் தன்முடியைப் பொருந்தவைத்து ஆனந்தக் கடலில் மூழ்கிக் களித்தனன். தேவர்களும் முனி வர்களும் செய்யினால் ஒருமுகூர்த்தகாலம் திருமஞ்சனஞ் செய்து அறுசுவையோடு கூடிய மஹாநிவேதனத்தை நைவேத் தியஞ்செய்வித்துப் பின் பிராஹ்மணர்களைப் போசனஞ் செய் வித்து அவர்களுக்கு வேண்டியவாறு ஆடையாபரண கந்த புஷ்பதாம்பூலாதிக ளெல்லாங் கொடுத்து மகிழ்வித்தனர். உற் சவத்தின்பொருட்டு விஸ்வகர்மாவரதராஜருடைய அனுக்கிரக த்தைப்பெற்ற கஜேந்திரனைப்போல ஓர்யானையைத் தந்த னன். இந்திரன் முத்துக்குடை தந்தனன். பிரமன் நவரத்ன மயமாகிய மகுடந்தந்தனன். இவ்வாறு யாவரும் யானை முதலியன வெல்லாந் தந்தபின்னர் அன்று மாலைக்காலத் தில் வரதராஜமூர்த்தி திவ்யாலங்காரத் தோடுங் கஜாரூட ராய் வீதியில் திருவோலக்கமா யெழுந்தருளிவர உற்சவத் தை நடத்தி முன் போல் விமானத்தில் வீற்றிருக்கச் செ ய்து பின் அபீஷ்டவரதா வாதாவென்று தோத்திரஞ்செ ய்து இந்தக் காஞ்சியில் பிரசன்னராயிருந்து பக்தர்களுக்கு அனுக்கிரகஞ் செய்து வரவேண்டுமென்று பிரார்த்தித்துக்

கொண்டு விடைபெற்றுத் தங்கள் தங்கள்பதங்களுக்குச் சென்றனர். பிரமதேவன் வரதராஜருடைய நாபிஸ்தானத்தில் மாணிக்கரூபமாய்ப் பதிந்து பிரகாசித்தனன்.

பின்னர் வரதராஜமூர்த்தி தனது பக்தனான பிரமனைப் பார்த்துத் தேவர்களுடைய வேண்டுகோளின்படி இக்காஞ்சி க்ஷேத்திரம் வைகுண்டத்தைப் பார்க்கிலும் அதிபாவனமாயிருப்பதால் எனக்கு அதிரம்யமாயிருக்கிறது. ஆகையால் இவ்விடத்தில் எனக்கு வருடந்தோறும் சித்திரைமாசம் எனது ஜன்ம நக்ஷத்திரமாகிய திருவோண நக்ஷத்திரத்தில் நெய்யினால் சஹஸ்ரதாரையில் அபிஷேகமும் பூசையும் உற்சவமும் பிராமண போஜனமும் செய்விக்கின்றவர்கள் யாரோ அவர்கள் என்னால் பெறக்கடவனவாகிய அபீஷ்டங்களைப் பெறக்கடவர்என்று வரமளித்தனர்.

யமுனாதீரத்தில் கோகுலக்ஷேத்திரத்தில் வாதராயண கோத்திரத்தில் யஜுர்வேதியான பானுவர்ண னென்னும் பிராமணன் யாத்திரைமூலமாய் இந்த அத்திகிரியையடைந்தனன். அன்று வரதராஜருக்கு கிருதாபிஷேகமாக விருந்தமையால் அவ்வபிஷேக மகோற்சவத்தைக் கண்டு களித்துப்புகழ்ந்து தன்னூரை யடைந்து சிலகாலம் வாழ்ந்திருந்து மரணமடைந்தனன். அவனைத் தேவகணங்கள் கொண்டுபோய்ச் சுவர்க்க பட்டாபி ஷேகஞ்செய்ய, அங்குசில காலம் வாழப் பெற்றுப் பின்னர் அவ்விடத்தி னின்றும் விஷ்ணு கணங்களால் சூழப் பெற்று வைகுண்ட பதத்தை யடைந்து வாழ்ந் திருந்தனன்.

நான்காவது அத்தியாயம் முற்றிற்று.

## ஐந்தாவது அத்யாயம்.

### வேகவதி வரலாறு.

பிரமனுடைய யாகத்தையழிக்க நதிவடிவங் கொண்டு வரும்பொழுது விஷ்ணுமூர்த்திநிர்வாணியாயிருந்ததலைக் கண்டு பாதாளத்தில் நதி ரூபமாய்ச்சென்ற சரஸ்வதி தேவியான வள் பின்னர் விஷ்ணுமூர்த்தியைத் தியானிக்க அவர் பிரசன் னராயினர். அவரை நோக்கி ஓ நாராயணரே நான் நதிரூப மாய்வரும்பொழுது நீர் நிர்வாணியாய்என்முன் எதிர்ப்பட்டீரா ல்லவா? அதனால் எனக்குமானபங்கமும் பதிவிரதாபங்கமும் வந்துவிட்டது. இதிற்சந்தேகமில்லை. ஸ்திரீகளுக்கு இவ் விரண்டுந்தானே அங்கமும் லக்ஷணமும்? இவைபங்கப்படுமா னல் இருந்தாலென்! இறந்தாலென்! ஆகையால் எனக்கு அவ்விரண்டையும் நீர்தரவேண்டும், தராவிடில் நான்பிராண னைவிடுவேன் என்றனள். அதுகேட்ட விஷ்ணுமூர்த்தி மன மிரங்கி. ஓ சரஸ்வதி! நீ எனது அம்சம். பிரமன்கையிலுள் ளசிருஷ்டி தண்டம் உன்னுடைய அம்சமாக என்னாலுண் டாக்கப்பட்டது. இங்ஙனமிருக்க இவற்றை மறந்து அத்த ண்டத்தை உன்னுடைய சுதந்தரமாகப்பிடுங்கி உன்னிடத் தில் ஒடுக்கிக்கொண்டு அகங்காரத்தோடு வந்தனையன்றோ? அதனால் உன்னைமான பங்கஞ்செய்து இப்பிலத்தி லொடுக்கி ப்பிரமனுடைய யாகத்தையும்முடித்து அவனுக்கு வேறு சிரு ஷ்டி தண்டமுங் கொடுத்தேன், இப்பொழுது நீ அகங்கார த்தை விட்டு என்னைத் தியானித்து எனக்குக் கற்பு வரவே

ண்டுமென்று பிரார்த்திக்கின்ற படியால் யான்சொல்லு முபா யத்தை மறுக்காது செய்வையானல் கற்புடையவளாவை யென்றனர். அதுகேட்ட சரஸ்வதி கற்பினையே பெண்ணல மாக வெண்ணினு ளாகலான் அவர்மொழிக் கிணங்கி அவ்வு பாயத்தைக் கூறுவாயென்றனள்.

விஷ்ணுமூர்த்தி ஓ! சரஸ்வதி! நீமுன் போல் நதியுரு வாகவே வெளிப்பட்டு முன் வந்த வழியே சென்று க்ஷீர நதி யோடு கலப்பையாயின் கற்பு நிலையழிந்த பாவம்போய் விடும். பின் அந்நதியோடு சமுத்திர சங்கம மாவாய். சங்கம மாகிச் செல்லுகின்ற உன்னழகைப் பிரமன் கண்டு உன்னிடத்திற் கொண்டிருந்த குரோத நீங்கி மகிழ்ச்சிகொண்டுன்னைக் காணச் சமுத்திர சங்கம ஸ்தானத்தில் பிரசன்ன மாவான். காஞ்சி க்ஷேத்திரத்துக்குக் கிழக்கெல்லையா யுள்ள சமுத்திர கட்ட சங்கமத்தினுலும், பர்த்தாவினுடைய தரிசனவிசேஷத்தினு லும் உனக்குச் சர்வதோஷமும் நிவர்த்தியாய்ப் பரிசுத்த த்தை யடைவாய். பின்னர் பிரமன் உனக்கு அர்த்தாசனம் (தன்னுசனத்திற் பாதி) கொடுத்துத் தழுவிக் கொள்ளுவனெ ன்று அனுக்ரகஞ் செய்து சென்றனர்.

சரஸ்வதிதேவி அவராணையின் படியே க்ஷீர நதியோடு கலந்து அதிவேகமாய்ச் சென்று சமுத்திர சங்கம மானபொ ழுது பிரமன் மகிழ்ந்து தேவியை யழைத்து அர்த்தாசனங் கொடுத்து கலைமகள் மகிழக் கலியாணஞ் செய்து கொண்டு ஹே சரஸ்வதி! நீ அதிவேகமாய் நதி வடிவங்கொண்டுவந்த படியினுல் இந்த நதி வேகவதி யென்று வழங்கக் கடவது

இதில் ஸ்நானஞ் செய்கின்றவர்களுடைய பாவம் அதிவேகமாய்ச் செல்லக்கடவது. புண்ணியம் வளரக்கடவது என்று வரமளித்து கலைமகளோடுசத்தியலோகமடைந்து சிருஷ்டித் தொழிலைச்செய்து வந்தனன்.

கங்கா தீர வாசியும் காசிபகோத்ரஜ்ஞனும் சாம வேதியுமான தௌமிய நாதனென்னும் வேதப் பிராமணன் பாக்யனும் வித்வானுமிருந்தும் பரதாரகமனனு யிருந்தனன். அப்பாவத்தினுல் கிழத்தனம் வந்தகாலத்தில் குஷ்டமுதலிய பல வியாதி களினுற் பீடிக்கப் பட்டு மன நொந்து இதற்குவிமோசனமு முண்டாகுமோ? வென்று பெரியோர்களைப் பணிந்து கேட்டனன். அவர்கள் மனமிரங்கி ஓ! அந்தணனே ! நீ வேகவதியில் ஸ்நானஞ்செய்தால் தீருமென்றனர். அவ்வந்தணன் வேகவதியை யடைந்துமூன்று காலம் ஸ்நானஞ் செய்ய அவனைப்பற்றி யிருந்த வியாதி யெல்லாந் தீரப் பெற்று திடசரீரத்தோடு தனது தேசம் போய்ச்சேர்ந்து சிலகாலம் சம்பத்துடன் வாழ்ந்திருந்து அந்தியத்தில் விஷ்ணு பதமடைந்தனன்.

ஐந்தாவது அத்யாயம் முற்றிற்று.

## ஆருவது அத்யாயம்.

# சிவக்ஷேத்திரவரலாறு.

பராசத்தி வாயுதிக்கில் ருத்திரமூர்த்தியாய்ப் பிரமன் காணக்காட்சி கொடுத்ததாலால்அந்த க்ஷேத்திரம் ருத்திரசாலையாயிற்று. இதற்குப் பெயர் ஐந்து அவையாவன:—

உருத்திரசாலை † உருத்திரகோடி கைலாயம் ஏகாம்பரம் மஹாஸ் மசானம் என்ப.

† ருத்திரம் என்னும் பதத்துக்கு இலிங்கமெனப் பொளாகவா றும், இலிங்க மூர்த்தங்கோடி யிங்கிருப்பதால் ருத்திரகோடி எனப் படும்.

எல்லை,—ஸ்வேதப்பெருமாளுக்கு (௫0) அம்சம் தெற்கிலுள்ள காயாரோகணேஸ்வராலயமே தெற்கெல்லை, அதற்கு (௩௨) அம்சம் மேற்கிலுள்ள கன்னிகேஸ்வர ராலயமே மேற்கெல்லை அதற்கு (உ௫) அம்சம் வடக்கிலுள்ள கைலாய நாதாலயமே வடக்கெல்லை அதற்கு (உ௫) அம்சங்கிழக்கிலுள்ள முற்கூறிய ஸ்வேதப்பெருமாளாலயமே கிழக்கெல்லை.

உருத்திரசாலையாகிய இவ்வெல்லையில் விநாயகர் ஆலயம் (க) ஸ்கந்தராலயம் (க) துர்க்காலயம் (ச) சிவாலயம் (அ) விஷ்ணுவாலயம் (௩) முத்திரைகள் (௫) தீர்த்தங்கள் (ச) அவை யாவன,—

காயாரோகணத்துக்கு (ச௫) அம்சம் வடக்கில் விஷ்வச்சேனருக்கு விஷ்ணு சக்கிரங்கொடுத்த விகடசக்ரவிநாயக ராலயம், அதற்கு (க) அம்சம் வடக்கில் மார்க்கண்டேயருக்கு ஞானோதயஞ்செய்த மாவிருக்ஷத்தினடியில் ஸ்கந்தராலயம், அதற்கு (க) அம்சம் கிழக்கில் கம்பாநதியின் வெள்ளத்தைத் தடுத்த பிரளயபந்தினி ஆலயம், அதற்கு (க0) அம்சம்தெற்கில் கஜாசுரனைச் சங்கரித்து ரிஷிகளைக் காத்த சம்பத்கௌரீஸ்வரி ஆலயம், அதற்கு (க0) அம்சம் மேற்கில் சம்புகனென்னும் அந்தகப்பிராமணனுக்கு கண்கொடுத்த ரேணு

காம்புஜவல்லி ஆலயம். அதற்கு (உரு) அம்சம் தெற்கில் வீர பத்திரமூர்த்தியினுடையகோபத்தைத்தணிவித்த வீரவரேஸ்வரி ஆலயம்,

அதற்கு (க0) அம்சம் கிழக்கில் யயாதிமகாராஜனுக்குச் சரீரத்தோடுமுத்தி கொடுத்த காயாரோகணேஸ்வர ராலயம் அதற்கு (ரு௬) அம்சம் வடக்கில் தேவர்களுக்குச் சுரத்தைப் போக்கிய சுரகரீஸ்வர ராலயம், அதற்கு (க0) அம்சம் நிருதியில் இந்திரனுக்கு விருத்திராசுரனைச் சங்கரிப்பதற்கு வச்சிராயுதங்கொடுத்த அநேகபதேஸ்வரராலயம், அதற்கு (க) அம்சம் வாயுவில் துண்டீர ராஜனுக்கு கைலாசபதவியைக் கொடுத்த கைலாயநாதராலயம், அதற்கு(௬)அம்சம் தெற்கில் வால, கில்யர், களுக்கு அபயப்பிரதங்கொடுத்து ரக்ஷித்த பச்சிமேஸ்வரராலயம், அதற்கு (உ௬) அம்சம் ஈசானியத்தில் சர்வதீர்த்தத்தினால் கங்கையின்பாபத்தைப் போக்கிய விஸ்வேசுவரராலயம், அதற்கு (ரு) அம்சம் வடக்கில் ஓணன் காந்தன் என்பவர்களுக்கு கட்கமும் குலமுங்கொடுத்த ஓணகாந்தேஸ்வரால்யம், அதற்கு (க0) அம்சம் கிழக்கில் பண்டாசுரனைச் சங்கரிக்கு நிமித்தம் தனது சக்தியினாலுலகங்களை நீருக்கிய மயானேஸ்வரராலயம்,—

அதற்கு நிருதியில் பாண்டவர்களுக்காகத் தூதுசென்ற பாண்டவப்பெருமாளாலயம், அதற்கு நிருதியில்சந்திரகாந்தியைத் தனது கண்டத்திற்றுங்கப்பெற்ற சந்திரக்கிரீவப் பெருமாளாலயம், அதற்கு ஈசானியத்தில்சந்திரவர்ணனென்னுமசுரனால் அந்தகாரத்தில் பிரகாசப்பட்ட ஸ்வேதப் பெருமாளாலயம்.

அதற்கு ஈசான்யத்தில் கள்ளக்கம்பர் கள்ளவடிவங்கொண்டு பின்கலிங்கரூபமானவிடம், அதற்கு(உ)அம்சம் மேற்கில் சிவாக்ஞையினல்மார்க்கண்டேயர் வசிக்குமிடம், அதற்கு (உ) அம்சம்வடக்கில் கங்காசைலாலகை-சிவார்த்தாசனத்தில் சமமாய் வீற்றிருப்பதுபோல தேவசில்பியினல் நிர்மிக்கப்பட்டவிடம், அதற்கு(௩)அம்சம் ஆக்னேயத்தில் நேத்திரத்தினின்றும் கங்கையையுண்டாக்கி வெள்ளக்கம்பரானவிடம், அதற்குக் கிழக்கில் சிவாக்ஞையினல் மயானத்தைக்காக்கும் வீரபைரவரிருக்குமிடம்.

அதற்கு வாயுவில் பிரமாண்டங்களையுண்டாக்கியதும் சர்வபாபங்களைப்போக்கவல்லதுமான சிவகங்கைத்தீர்த்தம், அதற்கு (ரு) அம்சம் ஆக்னேயத்தில் அங்காரகனது அக்னிரூபத்தைப்போக்கிய மங்களதீர்த்தம், அதற்கு (அ) அம்சம் நைருதியில் தேவர் சுரத்தைப்போக்கிய சுரகரதீர்த்தம், அதற்கு(கூ) அம்சம் வாயுவில் பாண்டவர்களுக்குக் கிருஷ்ணமூர்த்தியைத் துணையாக்கிய பாண்டவதீர்த்தம்.

தீர்த்தபலன்,-சிவகங்கையில் சோமவாரத்தில் ஸ்நானஞ் செய்வோர்க்கு கங்காஸ்நானபலனும், மங்கள தீர்த்தத்தில் மங்களவாரத்தில் ஸ்நானஞ்செய்வோர்க்குசரஸ்வதிநதிஸ்நானபலனும், சுரஹர தீர்த்தத்தில் செய்வோர்க்கு கோதாவரி ஸ்நானபலனும், பாண்டவ தீர்த்தத்தில் திருவாதிரையில் ஸ்நானஞ் செய்வோர்க்கு கிருஷ்ணாநதிஸ்நானபலனுமுண்டாகும்.

கிருஷ்ணாதீரத்தில் ஏலாபுரத்தில் ருக்வேதியும் கௌதமகோத்ரஞ்ஞனுமான கௌசிகனென்னும் பிராமணன் சத்கர்ம

ஹீனனாய்த்துராசாரசம்பன்னனாய்ப் பூமியில் நிக்ஷேபங்களைக் காண்பதற்கு எங்கும் உலாவிமார்க்கங்களில் யாத்திரையாய்ச் செல்லுகின்ற லட்சணமுள்ள பாலகர்களைத் தன்னிடத்திற் கழைத்துப்போய் அவர்களுக்கு வேண்டிய அன்னோதகங்களை யும் திரவியங்களையுங்கொடுத்துப் பாதுகாத்துவந்து ஆறேழு மாதமாவது ஒருவருடமாவது கடந்தபின் நிக்ஷேபங்காணு மிடங்களிற் பலிகொடுத்து அத்திரவியத்தை யெடுத்துக் கொள் வன். இவ்வாறு செய்து வருநாளில் காஞ்சிக்ஷேத்திரத்திலிரு ந்து ஓர் பிராமணன் யாத்திரையாக மார்க்கத்தில் வரும் பொ ழுது அவனது தாகவிடாயைக்கண்டு மனமிரக்கமுண்டானவ னாய் நீர்மோர் கொடுத்தனன். பின் சிலநாள்கழித்து மரண மடைய இயமன் பாசத்தாற்கட்டி தனதுலகத்திற்கொண்டுபோக சிவகணங்கள் அவனைமீட்டுக்கயிலாயத்திற் சேர்த்தனர். இதன் காரணமறியாது இயமன் கைலாயஞ் சென்று சிவபெருமானை வணங்கி இக்கொடுமையாளனிங்குவருவதற்குக் காரணமென் னையோவென்று வினவ சிவபெருமானார் ஓ! இயமனே! இவன் மகாபாதகனாயினும் ஒருசிறு புண்ணியத்தால் பலபெரிய பாவ ங்களைப்போக்கவல்ல ருத்திரசாலையினின்றும் வந்தஓர் பிராம ணனுக்குத்தாகந்தணிவித்தனன். அதனாலிங்குவரப்பெற்றனன் நீ செல்லக்கடவாயென்று விடைகொடுத்தனர்.

ஆறாவது அத்யாயம் முற்றிற்று.

———

## ஏழாவது அத்யாயம்.

## ஆம்பிரவிருக்ஷப்பிரபாவம்.

முனிகணங்களாற் சூழப்பட்ட புண்ணியகரமான அனேக விருக்ஷங்கணெருங்கிய ஆரண்யத்தில் உத்திரகோடிசாலையில் பாண்டவதீர்த்தத்திற்கு (கச) அம்சம் உத்தரத்தில் வேதம் மா விருக்ஷசொரூபமாய்வளர்ந்தோங்கி நிற்பதால் இந்தக்ஷேத்திரமும் உருத்திரகோடி சாலையெனப் பெயர்பெற்றது, இது சிவபீஜத்தினின்றுந் தோன்றியதாயும், ஸ்ரீகாமாக்ஷிதேவியினுல் ஏகாம்பரதருவெனப் பெயர்பெற்றதாயும் பதினுன்கு வித்தைகள் மல்லிகைக்கொடியாப் படர்ந்திருப்பதாயும்;மேலே மூலமும் கீழேகிளைகளுமாயுணரத்தக்க புண்ணிய சொரூபமாயும், சலப்பிரளயத்தில் மிதந்துவந்த மார்க்கண்டேயமுனிவரைக் காத்ததாயும் புராணுதிகளால் புகழ்ந்துரைக்கும் சிறப்புடையதாய் விளங்குவது.

### மார்க்கண்டேயமுநிவரைக்காத்தவரலாறு.

ஓர்கால் கைலாசத்தில் அதிவிசித்திரமாயலங்கரித்திருக்கும் அந்தப்புரத்தில் போகமூர்த்தியாய் உமாதேவியாரோடு அர்த்தாசனத்தில் வீற்றிருக்கும்பொழுது சிவபெருமானுக்கு மிகவும் பிரியரூபிகளான (கூச) கோடிசத்திகள் அகங்காரங்கொண்டவர்களாய்ச்சிவபெருமானைச் சமீபித்து, எங்கள் நாயகரே! நீர் பார்வதிக்கர்த்தாசனங் கொடுத்திருப்பதுபோல எங்களுக்குங் கொடுக்கவேண்டுமென்றனர்.

சிவபெருமான் அவர்களைப்பார்த்து இக்கைலாசத்திலுள்ளபுருஷரெல்லாம்என்னுடைஅம்சத்திற்ருேன்றினவர்,ஸ்திரீ

களெல்லாம் கவுரியம்சத்திற்றோன்றினவர். ஆகையால் புருஷர்களுக்கு யான்தலைவன், பெண்களுக்குக் கவுரிதலைவி. இம்முறையால் கவுரியை நோக்க நீங்களெல்லாந் தாழ்ந்தவர்கள், தாழ்ந்தவர்களாகிய வுங்களுக்கு யான் சமாசனம் எவ்வாறு கொடுக்கக்கூடும் என்னோடு சமானத்தி லிருக்கத்தக்கவள் பார்வதி யொருத்தியே என்றனர். அவ்வார்த்தைதனைக்கேட்ட சத்திகோடிகள் சிவபெருமானைப்பார்த்து என்னகூறினீர் உம்மைப்போலும் இவ்வளவு முழுமோசமாகப்பேசினவரை யாங்கள் எங்குங்கண்டதில்லை. ஆ ஆ யாங்களா கவுரியம் சத்திற்றோன்றினவர்கள். இந்தக்கவுரியல்லவா எங்களம்சத்திற்றோன்றினவள் இதனையறியார்போன்று எங்களுக்குச் சமமான ஆசனங்கொடுக்க மாட்டேனென்றது அடாது எங்களுக்கே கொடுக்கவேண்டும் அன்றியும்இந்தப்பார்வதிக்கு,பெண்களுக்கிருக்கவேண்டிய சாகசகுணமுதலியான விருக்கின்றனவா? மன்மதனுடையலீலையிற் சிறந்தவளா? நாயகன் குறிப்பறிதல் முதலியவற்றை யறியும் நன்னறிவுடையவளா? கல்வியறிவில் மிகுந்தவளா? உருவம் நன்னடக்கை குணம் ஆகிய இவைகளினிறைந்தவளா? அந்தோ? வொன்றுமில்லாதவள், இருக்குமாயின்ஒன்றைநீரே எடுத்துச்சொல்லும் அன்றி அவளையாவது உண்டென்று காட்டச்சொல்லுமென்று சத்திகோடிகள் கூறிய மொழிகளைக்கேட்டு அவர்களகங்கார மடங்குமாறு சிறிதே புன்னகைசெய்து அவர்களணிந்திருந்த வஸ்திரங்கள் போனவழிதெரியாமற் போக்கினர். உடனே அச்சத்திகளெல்லாம் நிர்வாணிகளா யிருந்தலைப் பார்வதியார்கண்டுதமது நாயகருக்கு அந்நிர்வாணகோலந் தோன்றுவண்ணம் தானோர்

சிலையாய் மறைத்தும் அச்சத்திகோடிகள் வேறுடை யுடுக்கு மளவும் இரண்டுகண்களையும் ஒருமுகூர்த்தகாலம் மூடியிருந்த னர். அதனால் சூரியன் சந்திரன் அக்கினிகளுடைய வொளி மழுங்க எல்லாவுயிர்களுஞ்செயலற்றிருண்மயமாயிருந்தன. அக் காலத்தில் சலப்பிரளயம்எங்கும்பரவிற்று. அவ்வெள்ளத் தில் அழிவில்லாதவராகிய மார்க்கண்டேயமுனிவர் அம்மகாப் பிரளயத்திலெல்லாவுலகங்களுமூழ்குவதைப்பார்த்ததிசயித்து இனியாம் என்செய்யக்கடவோமென்றுசிவக்தியானஞ்செய்து, ஓ! காமேசனே! ஒருபற்றுமில்லாது இவ்வெள்ளத்தில் நீந்தி வருகின்ற எனக்குஓர் ஆதாரங்காட்டவேண்டுமென்று பிரார்த் தித்துக்கொண்டு வரும்போது பிரளஜித்தால் காஞ்சி நகரத்தி லுள்ள வேதசொரூபமாகிய மாவிருட்சத்தின் இலை வெள்ளத் தின்மீதுதோன்றியது. அதைக்கண்டுசமீபிப்பதற்குமுன் அம் மா, தளிர் பூங்கனியுடைய கிளைகளுடன் வளர்ந்தோங்கியது அம்முனிவர் இதுஎம்பெருமான் கருணையேயாமென்று அம் மரத்தின்மேலேறி பிரளயசலத்தைப்பார்த்தாச்சரியமடைந்து தன்னைக்காத்த அவ்விருட்சத்தைச் சிவசொரூபமாகப்பாவித்து இதுநம்மைபாதுகாக்கவந்த கருணாவடிவென்று நிச்சயித்து அங்கிருந்தவண்ணமே அதன்மூலத்தில் அவ்யக்தமானசோதி சொரூபமாய் சிற்சொரூபமாய் விளங்கும் விசாலமான நகரத்தைக் கண்டதுவென்ன ஆச்சரியம்! இந்தலயகாலத் திலும் நாசமில்லாமல் சலமத்தியில் நிச்சலமாய் சோதி சொரூபமாய் விளங்குகின்றது இதனைக்காண்பதே பெரும்பய னுமென்று அவ்விருட்சத்தைப் பிடித்துக்கொண்டு அதனடியி லிறங்கவும் சிவகுமாரரான சுப்பிரமணியர் அம்மரத்திற் பழு

த்திருக்கும் பழங்களைப்புசித்துக்கொண்டிருப்பதைப் பார்த்து வணங்கி இந்தக்ஷேத்திரத்தின்பெயரென்னை? இவ்விருக்ஷ மெத்தன்மைத்து? தேவரீரிப்பழங்களைப் புசித்துக்கொண்டு வசிக்குங்காரணமென்னை? யாருடைய மகிமையினால் இச்சலப் பிரளயத்தினு மழியாதிருக்கின்றது? இவை யாவும் என்பால் கருணைகூர்ந்தருளல்வேண்டுமென்று பிரார்த்திக்க, அறுமுகக் கடவுள் இது காஞ்சிக்ஷேத்திரம் பிரளயத்தைச் செயித்தது பிரளயங்களுண்டாகுந்தோறும் மகாதேவி தனது பராக்கிர மத்தினாற்காப்பாற்றிவருகின்றாராதலால் பிரளயஜித் தெனப் படும். இவ்விருக்ஷம் சாக்ஷாத் சங்கரஸ்வரூபம் அச்சங்கரரே இவ்விருக்ஷத்துக்குப் பீஜமாகி விருக்ஷரூபமாயிருக்கின்றார். இப்பழம் வேதவித்யாசொரூபம் ஆகையால் நானிப்பழத்தை நாடோறும் புசித்துவருகிறேன். இதைப்புசித்தவர் வேதவித் யாகுருவாவரென்று சொல்ல அவரடியில்வீழ்ந்து வணங்கிப் பூசித்து அவ்வேகாம்பரர் விருக்ஷமூலத்திலிருந்து அப்பழங் களைத் தாமும் புசித்துவந்தனர். துங்கபத்ராதீரத்தில் சிருங் கிசைலத்தில் வாசஞ்செய்கின்ற கிரௌஞ்சனென்னும் ஒரு பிராமணன் நாடோறும் சிவபக்தசிரோன்மணிகளாகிய பிரா மணோத்தமர் பூசிக்கின்ற சுவர்னமயமான லிங்கங்களையபக ரித்து அதனைவிற்றுச்சீவனஞ்செய்துவந்தனன். அவனுக்குப் பதினாறு பிள்ளைகள் அலிகளாய்ப்பிறக்க அப்பிள்ளைகளைப்பார் த்து மிகவுந்துக்கித்து அவ்வலிரூபத்தை நிவர்த்திக்க புண்ய க்ஷேத்திரங்கள் தோறுஞ் சென்று தரிசித்துக்கொண்டு வருங் கால் இந்த ருத்திரசாலையை யடைந்து மாவிருக்ஷத்தைப்பார் த்து அதனடியில் ஒருக்ஷணகாலமிருந்து தன்னிளப்பை மாற்

றிக்கொண்டு தன்னகரை யடைந்தனன். இதனடியில் வாசஞ் செய்த புண்யவிசேஷத்தால் அப்பிள்ளைகள் புருஷரூபமடைந் தனர், அதைப்பார்த்து இனி நம்முடையகுலம் விருத்திய டையும் இவ்வாறு விருத்தியடையச்செய்தது ருத்ரசாலையென நிச்சயித்து ஆனந்தபரவசனாய் இளைப்பாறுவதற்குத் தங்கி யிருந்த புண்யமே இவ்வளவுபெரும் பேற்றைத்தருமாயின் அந்த க்ஷேத்திரம் எப்பொழுதும் வசிப்போமாயின் நமக்கு வரும் பலனை என்னவென்று மதிப்போமென்று அக்கணமே புறப்பட்டு காஞ்சி நகரத்திலுள்ள ருத்திரசாலையை யடைந்து நாடோறும் ஒழுக்கம் தவறாது சிவபூஜையிற் சிறந்தவனாய் வாழ்ந்திருந்து தேகாந்தத்தில் சிவலோகமடைந்தனன்.

ஏழாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## எட்டாவது அத்யாயம்.

### ரசாலேசப்பிரபாவம்.

வேதசொரூபமாகிய ஆம்பர விருக்ஷமூலத்தில் சாக்ஷாத் சங்கரர் கதலி குசுமம்(வாழைப்பூப்)போல் ஒருஅஸ்தப்பிரமா ணஞ் சோதிசொரூபராய் உமாலிங்கனத்தினால் குசகங்கண சோபிதராய் சதுர்மூர்த்தி வத்யகதராய் அகண்ட சச்சிதானந்த தேஜோமயராய் மான்மழுவரதாபய அஸ்தங்களாற் பிரகாசிக் கின்றவராய் தவளமேனியராய் பஸ்மோத்தூளித விக்ரஹராய் திரிணேத்ரராய் சந்திரசேகரராய் சர்ப்பகங்கணராய் கங்காதர ராய் சடாமகுடதரராய் சவ்யதக்ஷணங்களில் உமாதேயுங் கங் காதேவியுநின்று வீசப்பட்டசாமரைகளையுடையவராய்ருத்திர

கோடீஸ்வரராய் ஸ்ரீகாமாக்ஷிதேவியார் துதிக்க மகாபிரளயத்தைப்போக்கி அவர் வேண்டியாங்கு பாணிக்கிரகணஞ் செய்து நித்யகல்யாண சுந்தரராய் விளங்குகின்றார்.

உமாதேவியார் சிவபெருமானுடைய நேத்திரங்களைப் புதைத்தகாலத்தில் சிருட்டியாதி தொழில்கள்மாறி தருமங்களெல்லாமொழிந்து உயிர்களுக்குப்பாபம் மேலிட்டு அப்பாவங்களெல்லாங் கருமை நிறங்கொண்டு அத்தேவியாரது தேஜோ ரூபத்தைக் கருநிறமாக்கியது. அச்சமயத்தில் தேவர்கள் முறையோமுறையோவென் றோலமிடத் தேவியார் நடுக்கமுற்றுக் கண்ணைப்பொத்தி யிருந்தகைகளை நீக்கித் தமது திருமேனி மாறு பட்டிருத்தலைப் பார்த்ததிசயித்து மன வருத்தமுற்று இதன்காரணம் யாதோவென்று சிவபெருமானைப் பலமுறை பணிந்து ஹே! தேவதேவ!! மஹாதேவ! கருணாகர! சங்கர! சொர்னம்போற் பிரகாசிக்கும்என்மேனிபாபரூபமான கருநிறமடைந்து பார்ப்பதற்குச்சகியாத கோரமாகக் காணப்படுங்காரணம் என்னையோவென்று வினவினர்: சங்கரர் ஓ தேவியே! இதுகருமைநிறமென்று உயிர்களின் பாபத்திரட்சியாமென்னதேவிகேட்டுள நடுங்கிஹே! தேவதேவ!! ஜகந்நாதசரணாகதவத்ஸல என்று துதித்து, இதற்கு யான் செய்து கொள்ளத்தக்க பரிகாரமென்னையென்று கண்ணீரரும்பிமீளவுங் கேட்க சங்கரர் நீ விரைவாய் பத்ரிகாச்ரமத்துக்குச் சென்று அங்கு ஒரு குழந்தைவடிவங் கொண்டிருப்பாயாக. அவ்விடத்தில்புத்திரப்பேறு வேண்டிய காத்தியாயனமுனிவன் வருவான். அவனுன்னைப்பார்த்தவுடன்புத்திரகாமந்தீர்ந்துமகிழ்ச்சியடைந்து ஞானதிருஷ்டியினு லுன் சொரூபத்தையுமறிந்துதன்னுச்சிரம

த்துக்குக் கொண்டுபோய் (அ) வருஷம் உன்னைச் சீராட்டியும் பூஜித்தும் வருவான். பின்னர் என்னுஜ்ஞையினல் யோகதண்டம், ஜபமாலை, தீபஸ்தம்பம், இரண்டு குடம், விசிறி, இரண்டு சாமரை, வித்யாதாரம், வியாக்ராசனம், புத்தகம், வறுத்த பயறு, கங்கைமணல், கங்காதீர்த்தம், குடை இவைகளைத் தருவான் அவைகளை நீபெற்றுக் கொண்டு உடனே துர்ப்பிக்ஷமடைந்திருக்குங் காசிக்குச்சென்று அன்னதானத்தா லவ்வறுமையைப் போக்கி அன்னபூரணியென்று பெயர்பெற்று பன்னிரண்டு வருட மவ்விடத்திலிருந்து தென்றிசையைநோக்கிச் செல்லக்கடவாய். அப்படிச்செல்லும் பொழுது எவ்விடத்தில் புலித்தோல் சோமவிருத்தமாயும், ஆதாரபீடமாகிய குடம் அதன்ருத்திரமாயும், மணல் இலிங்கரூபமாயும், ருத்திராக்ஷமாலிகைபில்வமாலையாயும், குடை நாகாபரணமாயும், யோகதண்டம் திரிசூலமாயும், சாமரைகள் இரண்டு பெண்களாயும், விசிறி கிளியாயும்,குடம் குடதீபமாயும், புஸ்தகம்காமதேனுவாயும், வித்யாதாரம் ஊசியாயும், வறுத்தபயறுமுளையொடுகூடிய பயராயும், கங்கை பாலாயும் எவ்விடத்தில் மாறுகின்றதோ அவ்விடத்தைக் காஞ்சிக்ஷேத்திரமென்றறிவாயாக. அவ்விடத்தில்சோமருத்திரருடன் கூடிய அவ்விலிங்கத்தை நாடோறும் க்ஷீரத்தாலபிடேகித்துநாகாபரணத்திலலங்கரித்து பில்வமாலையைக்சாத்தி முளையோடுகூடிய பயரைநிவேதனஞ்செய்துதியானித்து அவர்பக்கங்களில்இரண்டு ஸ்திரீகளைகாவலாகத்தாபித்துகோக்ஷீரத்தைப்பானஞ் செய்துகிளியைக்கையிற் பிடித்துக்கொண்டுஊசியைநாட்டிஅதன்முனையில்பஞ்சாக்னி மத்தியினின்றுஎன்னைத்தியானித்துத்தவஞ்செய்துவருவாயாக,அப்பொ

ழுது நான்உனக்குப் பிரத்யக்ஷமாகிக் கல்யாணஞ்செய்து கொள்ளுகிறேன். அக்கணமே கருமைநிறம்நீங்கிசொர்ணுங்கிரூபத்தையடைவாயென்று கூறிய மொழியைக் கேட்டு பிரதக்ஷண நமஸ்காரங்கள் செய்து விடைபெற்று அவராணையின் படியே பதரிகாச்சிரமத்தில் காத்தியாயனமுனிவரை மகிழச்செய்து அவரால்யோகதண்ட முதலியவைபெற்று காசியை யடைந்து அன்னதானஞ் செய்து காசிராஜனுக்கு மோக்ஷமளித்து காஞ்சியை யடையவேண்டு மென்றெண்ணி வரும்பொழுது யோகதண்ட முதலியவை மாறினமைகண்டு இதுதான்காஞ்சிக்ஷேத்திர மென்றுதெளிந்து ஒவ்வொரு மாவிருக்ஷத்தினடியிலும் பெருமானைத்தேடித்தேடிக்காணுமல்முடிவில் ஒரு மாவிருக்ஷத்தடியிற் பரசிவன் வசிப்பதைக்கண் ..ானந்த பரவசமடைந்து அநேக நாள் சைகதலிங்கார்ச்சனை செய்துவந்தும் அவரருள் புரியாமையால் கடுந்தவம்சிலநாள்புரிய ஒருநாள் நாரதமுனிவர் தீர்த்தயாத்திரை மூலமாயவ்விடம் வர அவரை நோக்கி நாரதரே எனக்கு இறைவனிது நாளும் அருள்புரியாமையால் இனியான் செய்யத்தக்கதுயாதென்று கேட்க அவர் பஞ்சபாண மந்திரத்தை யுபதேசித்து விடைபெற்றுச் சென்றனர்.

அதன்பின்னர் அம்பிகை யம்மந்திரத்தை ஆறுமாத காலவரையில் சிவலிங்கார்ச்சனையோடு செபித்துத் தபஞ்செய்து வர அத்தபாக்கினி கைலாயத்தைத் தகிக்க அவரவர் வேண்டியாங் கருள் புரியுஞ் சங்கரர் அம்மையார் வேண்டியவாறே பஞ்சபாண மந்திரங்கட்குட்பட்டுக் காமமுடையவர் போன்று யோகினி கணங்களோடு லீலாவினோதம் புரிந்தும் அடங்கப் பெறுதவராய்ச் சற்றே திருவுளத்துப் பரிபவமுற்றுத் தமது

திருமுடியில் வசிக்குங் கங்கையில் மூழ்கிச் சிறிதே சுகமுற்று மீளவும் அக்கங்கைப் பார்த்துஉனது சொரூபமாகிய சலத்தில் மூழ்கியும் எனக்குண்டாகிய காமாக்கினிசிறிதேனுந் தணிய வில்லை யாகலான் பார்வதிதவம்புரியு மிடத்திற்குச் சென்று அவளது மந்திரசெபத்தைத் தடுப்பாயென உடனே கங்கை சிவனுருடையரோமகூபங்களிலிருக்கும் (௩.௦) கோடிதீர்த்தங் களையும் ஆகரிஷத்துக் கொண்டு சர்வ வியாபகராகிய சிவபெரு மானை ஹ்ருதயத்திலிருத்தி மிகவுஞ் சீதளசொரூபியாய் அதி வேகமாய்நந்திசைலமடைந்து அங்கிருந்து உமைதவம்புரியு மிடத்தையடைந்தனள். அதனை உமாதேவியார் பார்த்து கம் பம் கம்பம் என்று அப்பிரளயத்தைத் தடுக்கத் தமது தோழி யருள் ஒசத்தியையேவ, அக்காளிதன்கையிலிருந்த விஸ்வ பக்ஷணமென்னுங் கபாலத்தில், அவ்வெள்ளத்தை வெளியே போகவிடாமலுள்ளடக்கினள்.

அம்பிகை விக்னமில்லாமல் தவத்தைச்செய்து முடித்து அக்காளிக்கு பிரளயபந்தினியென்று பெயரிட்டனர். அது கண்டகாமேசர் மிகவுங் கோபங்கொண்டு தனது சடாபாரத்தி னின்றும் கங்கையை ஆயிரமுகத்தோடு மஹாப்பிரளயமாய்ச் செல்லச்செய்தனர். அம் மகா கங்கையைக்கண்ட வுமாதேவி யார் பிரளய பந்தினியாலும் மற்றெவராலும் இவ்வெள்ளத் தைத் தடுக்க முடியாதென்று அச்சமுற்று விஷ்ணுவை நினை க்க அவர் உடனே அங்குவந்து ஒரு பாதத்தைப் பூமியிலும் ஒருபாதத்தை ஆகாயத்திலுமாக வூன்றி அவ்வெள்ளத்தைத் தடுத்துநிற்க அப்பொழுது அவர் கண்டத்தில் ஒளிவீசும் சந் திரகலை கிரணங்களைப் பரப்பிப் பிரகாசித்தது. அதுகண்ட

வுமாதேவியார் தமது நாயகரெனநிச்சயித்து நடுக்கமுற்ற பொழுது சந்திரகண்ட விஷ்ணுமூர்த்தி ஓ தேவி யான் சந்திர சேகரனன்று அவரருளால் சந்திரகலை கண்டத்தில் வீசப் பெற்று சந்திரகண்டனென்று இங்கு வாழ்கின்ற உனது தமையன் என்று தன்னைத் தெரிவித்து ஓ சங்கரி இந்தவெள்ளம் வேறு சொரூபமன்று சாக்ஷாத் சங்கரர் சொரூபமே உன்னைச் சோதிக்கும்பொருட்டு இவ்வாறு வந்தனர். இவரை யான் தடுப்பதற்குக் கூடுமா? ஒருநாளுங் கூடாது; ஆகையால் நீ சிவபெருமானே துணையென நம்பி உன்னால் பூசிக்கப்பட்டு வரும் இந்த சைகதலிங்கத்தைச்சரணமடைந்து ஆலிங்கனஞ் செய்துக் கொள்வையாயின் சங்கரர் அக்கணமே கருணைகூர்ந்து மகிழ்ந்து பிரளயரூபமாறிக் கலியாண சுந்தரராய் உன்னை விவாகஞ் செய்துகொள்வரென்று கூறித் தங்நிலையிற்சென்றுநின்றனர்;

அந்த விஷ்ணுமூர்த்திசென்றவுடன் வெள்ளம்பெருக்கெடுத்துவருவதைக்கண்டதேவியார்நடுக்கமுற்று என்செய்வேனென்று சைகதலிங்க மூர்த்தியைப்பார்த்து எம்பெருமானே அன்பர்க்கெளியானே அடியாரிடர்களையும் அண்ணலே! சிவனே! சிவனே!! எனக்கு நீயே கதியென்று இருகரங்களாலு மார்பிறுக ஆலிங்கனஞ்செய்து தழுவினர், எம்பெருமானும் பிராட்டியாரது முலைத்தழும்பும் வளைத்தழும்புந்தமது திருமேனியி லழுந்தவே அதுகாறும் அடங்கப்பெறுதபேரவா அடங்கப்பெற்று காமேசராய் அப்பிராட்டியாரைத் தமது அர்த்தாசனத்திலிருக்க வீற்றிருந்தனர். அப்பொழுது உமாதேவியார் தாமடைந்திருந்த காளிம வடிவநீங்கிக் கவுரநிறம் பெற்றமையால் புதியகலியாணத்தை விரும்பினர். சிவகணங்

களும் ஏனையவிருடிகளும் அம்மையப்பருடைய பேரழகைக் கண்டு கலியாண கோலத்தைக்காணப் பேராசைகொண்டனர். இவர்களின்குறிப்பறிந்த பெருமான் விஷ்ணுமூர்த்தியை நோக்கி நீ எங்களிருவருக்கும் கலியாணமகோற்சவம் முன்னர் அகஸ்திய முனிவருக்கும் இவ்விடத்தில் வருடந்தோறுங் கலியாண மஹோற்சவ தெரிசனந்தருகின்றோம். ஆகையால் நடப்பதற்கு வேண்டிய பிரயத்தினங்களைச்செய்வாயென்று கட்டளையிட்டனர்.

விஷ்ணுமூர்த்தி அக்கட்டளையைஏற்று பிரமனாதி தேவர்களைப் பார்த்து ஓதேவர்களே இந்த கவுரிகலியாணத்தைமுடிக்கவேண்டிய கடமைப் பாடுடையவர் நீங்களே என்று யாவர்க்கும் பிரியமான பலவார்த்தைகள் சொல்லி நம்முடைய உலகங்களிற்சென்று ஆடையாபரண கந்தமாலை முதலியனயாவும் அதிசீக்கிரமாய்க் கொண்டுவந்து சேர்க்க வேண்டுமென்று சொல்ல யாவருங் கைகொட்டிக் கூத்தாடி அவரவருந் தங்கள் தங்கள் பதங்களுக்குச் சென்று எல்லாத் திரவியங்களையுங் கொண்டுவந்து நாடுநகரமுதலியவற்றையுங் கலியாண மண்டப முதலியவற்றையும் அலங்கரித்து பெருமானுக்கும் பெருமாட்டிக்குங் கலியாண மஹோர்சவமென்றுஎங்கனும் பேரிகைமுழக்கி துஜாரோகணமுதலியன வெல்லாம் வேதாகம விதிப்படி செய்வித்து ஒன்பது நாளுஞ்செய்யவேண்டிய திருவிழாவையும் முறையாகநடத்தி பத்தாநாளாகிய உத்திரதினத்தில்ஏகாம்பரநாதரையும் காமாக்ஷிதேவியையும், விஷ்ணுமூர்த்திலக்ஷிமிதேவியோடும் நானென்ன புண்ணியஞ்செய்தேன்நானென்ன பாக்கியஞ்செய்தேனென்று தோத்திரஞ்செய்துகலியாணமண்

டபத்தில் சகல வாத்தியங்களுமுழக்க இலக்ஷிமி தேவியான வள் பாலைவார்க்க விஷ்ணுமூர்த்தி ஏகாம்பரநாதருடைய திரு டிவிளக்கிப் பட்டாடையாலொற்றிப் பாததீர்த்தமுண்டு மன ங்களித்து மதுபார்க்கமூட்டி அப்பெருமான் திருக்கரத்தின் மேல்கவுரிதிருக்கரத்தை வைத்து மந்திர நீர்வார்த்துத் தத்த ஞ்செய்து சங்கதுந்துபிமுதலியபலவாத்தியங்கள் சத்திக்கவும் வேதமுதலியன கோஷிக்கவும், கற்பகமலர் முதலியன மாரி யாகப்பொழியவும், பிரமன் ஓமாக்னி வளர்த்தவும், காமாக்ஷி தேவியாருடைய கண்டத்தில் மாங்கலிய சூத்திரத்தைச் சாத் தியருளச் செய்தனர். அக்காலத்தில் தேவ யக்ஷ கின்னர கிம் புருட சித்தசாத்திய இருடிமுதலிய யாவரும் ஜயஜயவென்று முழக்கமிட்டு எங்கும் பேரொலி செய்தனர்.

அச்சமயத்தில் தேவதச்சனாகிய விசுவகர்மா, திரிபுர தகனகாலத்தில் ஆரோகணித்தசுவர்ணமயமானரதமும் இந்தி ரன் படிகத்தினாற் செய்த குடையும், இரத்னமயமாகிய மகுட மும் ஏகாம்பர நாதருக்கு முன்னே கொண்டுவந்து எங்கள் செல்வமே இப்பொழுது மனோன்மணியாகிய காமாக்ஷியுடன் இந்தகலியாணசுந்தரகோலத்தோடும் இவ்வந்திப் பொழுதில் இந்தரதத்தில் ஆரோகணித்து என்னாற்கொடுக்கப்படும் முடி யையுந் திருமுடியிற் சூடி இந்திரன் குடை பிடிக்க பாசுபதர் களாய் விளங்கும் தேவசமூகங்களாகிய அடியார்களெல்லாம் பரமானந்த வெள்ளத்தில் மூழ்கப்பவனிவர வேண்டுமென்று பிரார்த்தித்தனன். அவ்வண்ணமே வீதியில்பவனிவந்து ஆஸ்தானமண்ட பத்திலெழுந்தருளி யிருந்துயாவரையும் பார்த்து அன்பர்களே யோகபூமியாகிய இந்த உருத்திர

சாலையை நமது போக பூமியாகக்கொண்டு ஸ்ரீ காமாக்ஷி தேவியோடு எப்பொழுதும் இந்த ரசாலமூலத்தில் (மாமூலத்தில்) வீற்றிருந்து யாவருக்குந் தரிசனமாத்திரத்தில் சகல போகங்களுந்தருவோம். ஆனையால் காஞ்சிக்ஷேத்திரத்தில் தாண்டவகற்பமாகிய இந்தகற்பத்தில் பவுதி என்கிற மன்வந்தரத்தில் மூன்றுவதான தாமசமனுவும் கிருதயுகமும் விஷ்ணு கூர்மாவதாரமுங் கூடிய பவவென்கிற இவ்வருஷத்தில் சித்திரைமாசத்தில் மீனராசியில் சூரியனிருக்க சுக்லபக்ஷ பவுர்ணமி, பூர்வபல்குனி நக்ஷத்திரத்தில் மூன்றுவது பாதத்தில் நடந்த கலியாண மஹோற்சவம் போலும் வருடந்தோறும் வரும் பங்குனியுத்தரத்தில் இந்த கவுரி கலியாணத்தை யுத்தேசித்து மஹாபூஜையும் அலங்காரமும் உற்சவமும் பிராஹ்மணபூஜையும் தெரிசனமும் செய்கின்றவர்களுக்கு சகலாபீஷ்டங்களையும் கோடி கன்னிகாதான பலத்தையும் தருவோமென்று அனுக்கிரகஞ்செய்தனர்.

மகிமை.—காவேரி நதிக்கரையிலுள்ள திருப்பனங்காடென்னுந் திவ்ய க்ஷேத்திரத்தில் யஜுர்வேதியாகிய சம்புவென்னுமோர் வேதியனிருந்தனன். அவன்காஞ்சிநகரத்தின் பெருமையையும் பங்குனிஉத்திர மஹோற்சவ மகிமையையுங் கேட்டுத்தான் தரிசிக்கவேண்டுமென்றெண்ணிகாஞ்சிநகரத்தை யடைந்து கல்யாண மஹோற்சவத்தைக் கண்டு களித்து எம்பெருமானே இவ்வைபவத்தை வருடந்தோறும் யான் கண்டு களித்துய்யுமாறு அருள்செய்யவேண்டுமென்று பிரார்த்தித்துக்கொண்டு தன்தேசத்திற்குப் போய் அநேக வருஷம் ஜீவித்

திருந்து பின்னர் சிவகணங்கள் விமானங்கொண்டுவர ஸ்ரீ கைலயங்கிரிக்குச் சென்று அங்கு சிவகணங்களுடன் வாழ்ந்திருந்தனன். பின்னர் ஆயிரந்தலைமுறை அவ்வேதியன் வம்சத்தில் வந்தவர்களெல்லாம் ஏகாம்பரநாதருடையகல்யாண வைபவத்தைக் குடும்பசமேதராய் வந்து தரிசித்து தங்கள் தேசம் செல்லும் நியதியிற் றவறாதிருந்து முடிவில் ஒவ்வொருவரும் சிவகணங்களாலழைக்கப்பட்டு சிவலோகஞ் சென்றனர்.

எட்டாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## ஒன்பதாவது அத்யாயம்.

### சர்வதீர்த்தப்பிரபாவம்.

சர்வதீர்த்தமானது, நத்திசைலம் க்ஷீரநதி திருப்பாற் கடல் என்னு மூன்றுமுடைமையால் கோபுரமெனவும், வராகி அம்பிகை முதலிய சத்திபேதங்களுடையது பக்ஷபுரியெனவும் தேவமூலமுடையது க்ஷேத்ரப் பிரஸ்தமெனவும், சூதமுதலிய விருக்ஷமூலமுடையது குண்டிகமெனவும், சூரியபுஷ்கரணியுடையது நிஷண்ணமெனவும், சந்திரபுஷ்கரணி யுடையது க்ஷீரசரித்சமுத்திரமெனவுங் கூறப்படும்.

காஞ்சிநகரத்திலுள்ள ருத்திரசாலையில் வீற்றிருக்கின்ற ஏகாம்பரநாதருக்கு (எ) அம்சம் நைருதியிலுள்ளது. இதில் முன் பிரளய பந்தினியின் கபாலத்தில் ஆகரஷணம் செய்யப்பட்ட சிவபிரானது ($3\frac{1}{2}$) கோடிரோம கூபத்தினின்றும் வெளிவந்த தீர்த்தசமூகமாகிய கம்பாநதியானது பின்னர் பெருவெள்

ளமாய்ப் பெருக்கெடுத்து பாத்திரத்தில் சலம் விழுவதுபோல் வீழ்ந்து பூமிக்குள் அந்தர்வாகினியாய் விளக்குகின்றதனுலும் பின்னர் அச்சிவபெருமானது சடைமுடியிலுள்ள கங்கையினின்றும் ஆயிரமுகமாய் வெளிப்பட்ட தீர்த்தசமூகத்தைத் தன்னுடன் கொண்டிருந்தலாலும் சர்வதீர்த்தமெனப் பெயர் பெற்றது. அம்மையாரால் தழுவ வெளிபபட்ட ஏகாம்பரநாதர் எட்டுவயதோடு விளங்கும் காமாக்ஷிதேவியை நோக்கி, ஹே தேவி! இச்சர்வதீர்த்தத்தில் அந்தர்வாசினியாயிருக்கும் கம்பாநதியின் பெருமையை என்னென்று சொல்வேன் உன்னை அநேகநாளாய்ப் பிரிந்திருந்ததனு லெனக்குண்டாயிருந்த பெருந்துயரத்தையும் வெள்ளத்தைக்கண் டுனக்குண்டாகிய பெருங் கப்பத்தையு மொழித்து எனக்கு உனது முலைச்சுவட்டையும் வளைச்சுவட்டையும் என்றும் பெற்றிருக்கும் பேற்றையும் உனக்கு எனது அர்ச்சனையையும் ஆலிங்கனத்தையும் என்றும் பெற்றிருக்கும் பேரானந்தத்தையுந் தந்ததென்றுகூற அதனைத் தேவியார் கேட்டு புன்னகையரும்பி அத்தீர்த்தத்தின் மகிமை இத்தன்மைத்தென வறிந்து அதில் ஸ்நானஞ்செய்ய விருப்புடையவராய் அத்தீர்த்தத்தைப் படி முதலிய ஆவரணங்களா றழகுபெறச்செய்துசங்கற்பங்கூறிஸ்நானஞ்செய்து அதீர்த்தத்தினின்று மெழுந்திருக்கும்போது எவ்வனசாலியாயும் சௌந்தரியமுடையவராயும் பிரகாசிக்கின்றமங்கள சொரூபியாயும் விளங்கினர்.

பின்னர் தமது உருவத்தைக்கண்டு மகிழ்ந்து அத்தீர்த்தக்கரையினின்று இருக்-யஜுர்-சாமவேதியர்களான அந்தணர்

களுக்கு கோதானம் இரணிய தானங்களும் சூரியசந்திரரிருக்கும்வரையில் சாஸ்வதமான சீவனஞ் செய்யப் பூதானமுஞ் செய்து அவ்விடத்தினின்றும் புறப்பட்டு காமகோட்டத்தையடைந்து தர்மசாலைகளை யேற்படுத்திமகா திரிபுர சுந்தரியான மஹாசத்தியை யாராதித்து மீண்டுந் தர்மசாலைக்குத் திரும்பி (கூ௨) கருமங்களையுஞ்செய்து அத்தருமம் எக்காலமு நடந்து வரவேண்டுமென்னும் எண்ணமுடையவராய்த் திரவியத்துக்கு அக்ஷயபாத்திரமான காமதேனுவையும் கற்பகவிருக்ஷத்தையும் சிந்தாமணியையும் பிரதிஷ்டைசெய்து அவைகளைக் கொண்டு அம்முப்பத்திரண்டு தருமங்களையும் யுகங்கடோறும் அழிவின்றிச்சரிவர நடத்த அரசனுணையின்றி யமையாவாகலான் என்றும் அழிவில்லாதவராகிய கணபதியை அரசராக நியமித்து முடிசூட்டி அவரிடம் ஒப்புவித்து, பின்னர் காமகோடிபீடத்தில் வசிக்கும் திரிபுரசுந்தரியைப் வணங்கி விடைபெற்று கச்சபேஸ்வரமூர்த்தியிடஞ் சென்று பூசித்து பிரதக்ஷண நமஸ்காரஞ்செய்து விடைபெற்று சர்வ தீர்த்தக்கரையடைந்து மூன்று பிரதக்ஷணஞ்செய்து அத்தீர்த்தக்கரையினின்று தீர்த்தஸ்னனத்தையுத்தேசித்து யாத்திரையாகச் சென்று சகல தீர்த்தங்களிலும் ஸ்னனஞ்செய்தவர்களுக்கு என்ன பலனுண்டாகுமோ அப்பலன் இத்தீர்த்ததனைத் தரிசித்தமாத்திரத்தி லுண்டாகுமென்று வரங்கொடுத்து தனது நாயகரிடஞ்சென்று வணங்கி அவரது வாமபாகத்தையடைந்து நித்யகல்யாணியாய் விளங்கினர். காஞ்சியில் யாத்திரர்வாசிகள் சர்வதீர்த்தத்தைத் தெரிசுத்தும் ஸ்னனஞ்செய்தும் அவ்வப் பலனைப் பெற்றுவருகின்றனர்.

மகிமை,—தாம்பிரவர்ணிதீரத்தில் அகஸ்தியகோத்ரஜ்ஞனும் சாமவேதியனுமாகிய சோமனென்னும் ஓர் வேதியன் மதங்க (சண்டாள) குலத்தளான அழகிற் சிறந்த வோர் பெண்ணை மோகத்தால் சங்கமஞ்செய்து ஒரு பிள்ளையைப் பெற்றனன். இவ்வேதியனால் பிதுர்த்தேவதைகளை யுத்தேசித்துச் செய்யப்பட்ட ஸ்ரார்த்தாதிகளனைத்தும் கிருமிரூபமாகப் போயின. சொர்க்கத்திலுள்ளபிதுர்தேவதைகள் நரகமடைந்தனர். இவைகளையெல்லாம் அந்தப்பிராமணனறிந்து மிக்க வருத்தமுற்று தீர்த்தயாத்திரை செய்யப்புறப்பட்டு அங்கங்குள்ள தீர்த்தங்களில் ஸ்நானஞ்செய்துகொண்டு முடிவில் ருத்திரசாலையை யடைந்து சர்வதீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்த மாத்திரத்தில் அந்தப் பிராமணனுடைய பிதுர்க்களனைவரும் இப்புண்ணிய விசேடத்தால் கோரமான நரகத்தினின்றும் நீங்கி சுவர்க்கமடைந்தனர். பின்னர் இவன் செய்யப்பட்ட ஸ்ரார்த்தாதிகளைப் பிதுர்க்கள் திருப்தியுடையவாகளாய் ஆகாரமாகக் கொண்டார்கள்.

ஒன்பதாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## பத்தாவது அத்யாயம்.

## காமகோட்டப்பிரபாவம்.

வாயு ஆக்னேயதிக்குகளில் திருவுருக்கொண்டு விளங்கும் சிவவிஷ்ணு சொரூபங் ஞானேயாகிய பராசத்திக்கிருப்பிடமாய் சர்வான்மாக்களுக்கும் சர்வ காமங்களையும் எளிதிற் கொடுக்

கும் ஆற்றலுடையதாய் விளங்குவதால் இந்த க்ஷேத்திரம் காமகோட்டமெனப்பெயர் பெற்றது. இதற்குப் பெயராறு. அவையாவன,—

ஸ்ரீபுரம் பத்மநாமகம் சாமக்கோட்டம் காமகோடி கல்யாணபுரி ஜீவன்முக்தி க்ஷேத்திரம்.

எல்லை, —ஸ்வேதப்பெருமாளுக்கு (கஎ) அம்சம் கிழக்கிலுள்ள க்ஷேத்ராங்கி என்னும் துர்க்காலயமே கிழக்கெல்லை, அதற்கு (கஙி) அம்சம் தெற்கிலிருக்கின்றசிம்ஹாலயமேதெற்கெல்லை, அதற்கு (கடு) அம்சம் மேற்கிலிருக்கின்ற காயாரோகணாலயமே மேற்கெல்லை, அதற்கு (சஅ) அம்சம் வடக்கிலுள்ள முற்கூறிய ஸ்வேதப்பெருமாளாலயமே வடக்கெல்லை.

இந்நான்கெல்லைக்குட்பட்ட பிரதேசமே காமராஜபீடமெனப் பெயர்பெறும். விநாயகராலயம் (க) ஸ்கந்தராலயம் (க) துர்க்காலயம் (சு) விஷ்ணுவாலயம் (ச) சிவாலயம் (ஙி) தீர்த்தம் (ச).

க்ஷேத்திராங்கி என்னுந் துர்க்கைக்கு(கூ0)அம்சம் தெற்கில் தேவசில்பியினால் பிரதிஷ்டைசெய்துபூஜிக்கப்பட்டசங்குபாணி விநாயகராலயம்,—அதற்கு (சு( அம்சம் மேற்கில்பிரமதேவனுக்குக் குருமூர்த்தமாய் தாரக மந்திரத்தையுபதேசித்த குமரகோட்டமென்னும் ஸ்கந்தராலயம், அதற்கு (உச) அம்சம் தெற்கில் கிராமதேவியாகிய உக்கிரவாசினிஎன்னும்மஹாதுர்க்கை ஆலயம், அதற்கு (க0) அம்சம் வடக்கில் சிவபெருமானை யாராதித்துத் தநுர்வித்தையில் மிகவும்பண்டிதையான தாந்தோனி ஆலயம், அதற்கு (ஙு) அம்சம் வடக்கில் பலிமுத

லிய பூஜைகளால் தேவர்களுடைய விக்கினங்களைப் போக்கிய பஞ்சசந்திரிகை ஆலயம், அதற்கு (௫) அம்சம் வாயுவில் நீலை என்னும் ஸ்திரீயின் கர்ப்பத்தைக் காத்து அவளால் பூஜிக்கப்ப்பட்ட தீர்த்தமாலினி ஆலயம், அதற்கு (௨0) அம்சம் உத்தரத்தில் கோரக்ஷசித்தர் என்பவருக்கு விசேடமான செல்வத்தைத் தந்தருளிய ஹேமாசனு தூர்க்காலயம், அதற்கு (௨௯) அம்சம்தெற்கில் திரிசிரனைத் சம்ஹரித்துக் காம பீடத்தைக் காத்த பீடவர்த்தினி ஆலயம், அதற்கு (கூ) அம்சம் வடக்கில் லக்ஷ்மியினுல் பூஜிக்கப்பட்டு மன்மதனைம்புத்ரனுகவரமளித்த தூர்வாவர்னப் பெருமாளாலயம் அதற்கு (க௨) அம்சம் ஆக்னேயத்தில் ஆதிசேடனுலர்ச்சிக்கப்பட்டு உலகைத்தாங்கும் வல்லமையைத்தந்த திரிவிக்கிரமப்பெருமாளாலயம், அதற்கு (ச) அம்சம் வாயுதிக்கில் மதுவருஷத்தைப் பொழிந்த மதுப் பெருமாளயம், அதற்கு (௨) அம்சம் ஈசானத்தில் மகாகாளரை அர்ச்சித்து அனேகம் பிள்ளைகளைப் பெற்ற காளாங்கப் பெருமாளாலயம்.

ஆதிசேடன் சுப்பிரமணியர் பிள்ளையாக வரமேண்டுமென்றர்ச்சித்த மகாகாளராலயம் அதற்கு (௨) அம்சம் ஈசானியத்தில் ஜகதாத்மா என்பவருக்குக் கவித்துவத்தைத் தந்தபட்டாரகேஸ்வரராலயம், அதற்கு (௩கூ) அம்சம்தெற்கில் முன் பிரலயத்தில் பன்னிருசூரியர்களால் நீலவர்ணமாகிய படங்களையுடைய சர்ப்பங்களுக்கு முத்தியைகொடுத்த பணுதரேசராலயம் அதற்கு (ரு) அம்சம் வடக்கில் கத்ரு புத்ரர்களான சர்ப்பங்களை கருடபயத்தினின்றுங்காத்த பணீசராலயம் அதற்கு

(உ௪) அம்சம் தெற்கில் பிரமன் சரஸ்வதி சனற்குமாரர் ஆரி யன் சாஸ்தா சண்டுகை சுப்பிரமணியர் கச்சபம் இவர்களால் பூஜிக்கப்பட்டதும் தேவர்களில் அமிர்தநிமித்தமாய் கச்சபத் திற்குப் பலத்தைத் தந்ததும் சுவயம்புவாயும் மகாலிங்கமாயும் ஆதியந்தமற்றதுமான கச்சபேசராலயம்.

அதற்கு (ரு) அம்சம் வாயுதிக்கில் ஏகாம்பரநாதருக்கு வல்லபையான தபோவேஷத்துடன் கூடிய காமாக்ஷிதேவி ஆலயம், அவ்வாலயத்துள் நைருதியில் அன்னபூரணி உருவங் கொண்டு காசியில்கருப்பைத் தெளிவித்த அன்னபூரணி ஆல யம், அதற்கு வாயுவில் தேவியின் தன்யபானஞ்செய்து சுப் பிரமணியரைப்போலான சாஸ்தா ஆலயம், அதற்கு ஈசானத் தில் அஞ்சனகாமாக்ஷியும் விருத்தரூபியான லக்ஷ்மியும் அதற் குக் கிழக்கில் புத்திரப்பேறு வேண்டியவைவஸ்வதமநுவுக்கு மூன்றுதரம்பிரதக்ஷணஞ்செய்துசுபுத்திரனையடைவாயென்று காமாக்ஷிதேவியினுல் திருவாய்மலரப்பெற்ற சந்தானமென்னு நாமத்தையுடைய ஸ்தம்பமொன்றுமுள்ளன. இச்சந்தான ஸ்தம்பத்தை காமாக்ஷிதேவி அநுக்கிரகித்தபடியே வைவஸ் வதமநு மூன்று பிரதக்ஷணஞ்செய்து புத்திரப்பேறுபெற்று அந்தஸ்தம்பமூலமாய் பிலத்துவாரத்தின் வழியே அயோத் தியை யடைந்தனன். அதற்கு (க) அம்சம் மேற்கில் சிவபிரா னது முகத்தினின்றுந்தோன்றியதும் இரண்டு பூதங்களுக்கு முத்தியைக்கொடுத்ததுமாகிய பஞ்சதீர்த்தம், அதற்கு (உ௪) அம்சம் தெற்கில் யயாதிக்குச் சொர்க்கலோகத்தைக்கொடுத்த காயாரோகணதீர்த்தம், அதற்கு (உக) அம்சம் வடக்கில் சனற்

குமாரர் சாபம்போக்கிய சித்திதீர்த்தம். அதற்கு (கூ) அம்சம் வடக்கில் கார்த்தவீரியனுக்கு நிஜரூபமளித்த சக்கரதீர்த்தம்.

தீர்த்தபலன்,—பஞ்சதீர்த்தத்தில் சுக்கிரவாரத்தில் ஸ்நானஞ் செய்வோர்க்கு கோதாவிரியில் ஸ்நானஞ்செய்த பலனும், காயாரோகணதீர்த்தத்தில் குருவாரத்தில் ஸ்நானஞ்செய்வோர்க்கு சிந்தாதியில் ஸ்நானஞ்செய்த பலனும், சித்திதீர்த்தத்தில் ஆதிவாரத்தில் ஸ்நானஞ்செய்வோர்க்கு நர்மதையில் ஸ்நானஞ்செய்த பலனும், சக்கரதீர்த்தத்தில் தேவி ஜன்ம நக்ஷத்திரத்தில் ஸ்நானஞ்செய்வோர்க்குக் கண்டகியில் ஸ்நானஞ்செய்த பலனுமுண்டாகும்,

மகிமை,—கங்காதீரத்தில் குண்டினி நகரத்தில் ஸ்ரீ வத்ஸகோத்திரஜ்ஞனும் ருக்வேதியுமான ஜகந்நாதனென்னு மோர் பிராமணன் வேதகிருத்தியங்களை யொழித்து துஷ்கிருத்தியங்களைக் கைக்கொண்டு அஜம் மச்சம் இவைகளைக் கொன்று வியாபாரம் நடத்தி அவைகளைத் தானுந் தின்று வாழ்ந்துவருங்காலத்தில் யாத்திரார்த்தமாய்க்காஞ்சியிலிருந்து வந்த பிராமணனுக்குச் சிறிது பொருள் தந்தனன்.

அச்சிறிது பொருள்கொண்டு தனக்குவேண்டிய ஆகாராதிகளைச் செய்துகொண்டு காசியை யடைந்தான். பின்னர் ஜகன்னாதன் விஷக்கடியாலிறக்க அவனை யமதூதர்கள் மிக்க கோபத்தோடு பாசத்தாற் கட்டி அக்னிமயமாகிய தண்டங்களால் மோதி மண்டையைப் பிளந்து அக்கினிச்சுவாலைவீசும் மார்க்கமாய் யமனிடம் அதிவேகமாய்க்கொண்டு செல்லும் பொழுதுதேவி யாஜ்ஞையால் அவருடைய கணங்கள் அத்

தூதர்களைக்கொன்று விமானத்திலேற்றி தேவி சமீபத்திற் சேர்த்தனர். இயமனிவைகளைக்கேட்டு அம்பிகையினிடத்திற் சென்று வணங்கி நாகவேதனையை யனுபவிக்கவேண்டிய இம் மஹாபாபின யடியேன்வச மொப்பித்தல் முறைமையென்று பிரார்த்தித்தனன். அதுகேட்ட தேவி என் க்ஷேத்திரத்தி லிருந்துயாத்திரையாகப்போன வோர் பிராமணனுக்குச்சிறிது பொருளுதவினன் அது எனக்குப் பிரீதியாயிற்று. அதனால் சகல பாபங்களுனின்றும் நீங்கினன். இனி இவ்வந்தணனை உன்வச மொப்புவித்த லடாதென்று கூற யமன் யான் கேட்ட பிழையைப் பொறுக்கவேண்டுமென்று பலமுறையும் வணங் கித் தனதுலகஞ் போய்ச் சேர்ந்தனன்.

பத்தாவது அத்யாயம் முற்றிற்று.

———





ஸ்ரீகாமாக்ஷிதேவ்யைநமஃ

# பதினொன்றும் அத்யாயம்.



## பிலாகாச ப்ரபாவம்.

பிலாகாசமானது இஷ்டசித்தி தீர்க்கத்திற்கு மூன்றம்சம் ஈசானத்தில் ஸ்ரீகாமாக்ஷிதேவி வீற்றிருக்கும் ஆலயத்திலுள்ளது.

இந்த மஹாபிலம் எவ்வளவு விசாலமுள்ளதோ அவ்வளவு விசாலமாகக் காயத்திரி சொரூபமான மண்டபம் அதனைமறைத்து அதற்கு மறைவிடமாக விருக்கின்றது.

அந்தமண்டபத்தை ஆதாரமாகக் கொண்டிருக்கின்ற அந்தப் பிலமானது நாத பிந்து யுக்தமான பரமாகாசவடிவமா யிருப்பதால் (நாதபிந்து சம்ஞ்சிதம்பரமம்வியோமம்)என்றும், அந்தப்பரமகாசம் பிரமத்துக்குச் சரீரமாயிருப்பதால் (ஆகாசசரீரம்பிரஹ்மா) என்றும், அந்தப் பிரஹ்மசொரூபமாகிய பரமசிவத்துக்கும் அதுவேசரீரமாயிருப்பதால்(சம்புசரீரம்) என்றும், நிஷ்கள சகளசொரூபமாயிருக்கிற பரசிவத்தியானத்தால் அடையத்தக்கமோக்ஷத்தைப்பிரத்யக்ஷமாகக்கொடுப்பதால்(பிரத்யக்ஷம்மோக்ஷதம்பரம்)என்றும்,ஞானவான்கட்கு சித்சொரூபத்தை விளக்குவதால்(தேவசிந்ப)என்றும், உலகத்துக் காமவிலாசமா யிருப்பதால் (ஜகத்காமகளாகாரம்) என்றும், பூமிக்கு நாபிஸ்தானமா யிருப்பதால் (குண்டலினீபதம்) என்றும்,பூமிக்கு மர்மஸ்தானமா யிருப்பதால்(ஆதிபௌதிகமர்மாங்கம்) என்றும்,சர்வகாமங்களுமிருப்பதற்குஒருகரமாயிருப்பதால் (காமகரம்) என்றும், எவ்வுலகத்தாராலுங்கொண்டாடப்படும் பிரகாசமுடைத்தாயிருப்பதால் (திவ்யம்) என்றும்,பாவங்களைப் போக்கடிப்பதாயிருப்பதால்(அகக்னம்) என்றும், சர்வசித்தியையுங்கொடுப்பதாயி

ருப்பதால்(சர்வசித்திதம்)என்றும்,இந்திரியகாமங்களையடக்குவதா ல்(தபஸ்தானம்) என்றும், ஒருவராலு மறியக்கூடாத பரமரகஸ்யமா யிருப்பதால் (சூக்ஷமம்பிலம்) என்றும், ஸ்ரீபுரம்,திரிமூர்த்திகள்,ஈச சம்பந்தமான சொரூபங்கள், திக்குகள்; உலகங்கள், மேரு கோர ரூபமாகியபூமி ஆகிய இவைகட்கு ஒன்பது துளையோடுகூடியமார்க் கமாயிருப்பதால் நவத்துவாரஸ்யமார்க்கம் என்றும், பூமிக்குக்கார ணமாகிய யோனி ஸ்தனமாயிருப்பதால் (பூயோனி) என்றும், இஷ்டகாமத்தை யுத்தேசித்து யார் யார் எந்தெந்த விதமாகத் தரு மங்களை யொருதரஞ் செய்தபோதிலும் அத்தருமங்களை நல்ல தருமங்களாகவாக்கி அவர்களுக்கு அத்தருமம் ஒன்றுக்கு ஒரு பல னுகவல்லாமற் கோடிபலனைக் கொடுப்பதா யிருப்பதாலும், குபே ரன்போல் சம்பத்துண்டாகவேண்டுமென்று திரவியத்தை விரும்பு வோருக்கு அத்திரவியத்தைக் கோடியாகக்கொடுப்பதா யிருப்பதா லும், மோக்ஷமானதுகாமத்தின் கோடியி(முடிவி)லிருப்பதால்அந்த மோக்ஷவின்பத்தைக் கைவிட்டுக் காமத்தையே விரும்புவோருக்கு அந்தக் காமத்தைக் கோடியாகக் கொடுப்பதாயிருப்பதாலும், மோ க்ஷமானது புருஷார்த்தத்தின்கோடியா (முடிவா)கவிருப்பதால்அந் தக் காமவின்பத்தைக்கைவிட்டு மோக்ஷத்தையேவிரும்புவோருக்கு அந்தமோக்ஷவின்பத்தைக்கோடியாகக் கொடுப்பதாயிருப்பதாலும்; இங்ஙனம் அறம்பொருள் இன்பம்வீடென்னும் நான்கையும்தனித்த னியேவிரும்புவோருக்கு அவ்வண்ணமேதனித்தனியாயும். அறம் பொருளின்பங்களை விரும்பாது மோக்ஷத்தைமாத்திரம் விரும்பும் மோக்ஷகாமிகளுக்கு அந்தமோட்சத்தோடு ஏனையமூன்றையும்,தரு மம் அருத்தம்,காமம்என்கிற மூன்றைமாத்திரம்விரும்புவோர்க்குஅ வற்றையும்,அவற்றோடு மோக்ஷவிருப்பத்தையும்கொடுப்பனவாகவி ருப்பதாலும்,பரமசிவமூர்த்திநெற்றிக்கண்ணினுல்தகிக்கப்பட்டகா மனைப்போலக் காமாக்ஷிதேவி தன்னுடைய நேத்திரத்தினின்றும்

லீலாமாத்திரமாய்க் கோடிகாமர்களை யுண்டாக்கியதாலும் (காம கோடி) என்றும்,வீட்டைவிரும்புவோர்க்கு அறம்,பொருள்,இன்பங் களோடு அவர்கள் விரும்பிய வீட்டையும், அறம்,பொருள் இன்பங் களை விரும்புவோர்க்கு, அவற்றோடு அவர் விரும்பாத வீட்டையும் கொடுத்தற்கு அந்நான்கும் அப்பிலத்தையிடமாகக் கொண்டிருத்த லால் (காமகோஷ்டம்) என்றுஞ்சொல்லப்படும்.

சிவபெருமான்முன்னொருகாலத்தில்தாருகாவனத்திற்சென்று இருஷிபத்தினிகளுடையகற்பையழித்தகாலத்தில்அவர்கள்கணவர் களாகிய இருஷிகள்சிவத்துவேஷிகளாய் எவ்வுருவுந் தன்னுருவமா கவேயுடையசிவபரஞ்சுடரைப்பலவாறுணசிந்தைமொழிகளாலிகழ் ந்து, பின்னர் அநுதினத்தியமாகிய அச்சிவ பரஞ்சுடரை அழிக்க வெண்ணிப் புலி பாம்பு மான்கொக்கு முயல்கன் உடுக்கை அங்கினி முதலியவைகளையேவியும்அவையெல்லாம்அவருக்குஅணிக்கலமாக வும் ஆடைமுதலியனவாகவும் ஆனமைகண்டு மனம்புழுங்கி இவனை இனிக் கண்டோரெல்லாம் நகைக்கும் வண்ணஞ் செய்யவேண்டு மென்று துணிந்து மிகவும் அகங்காரங்கொண்டு அலியாய்ப் போக வேண்டுமென்று சபித்துப் புலம்பிக்கொண்டிருந்தனர். சிவபெரு மானார் (பெண்ணாகி யாணயலியாய்ப் பிறங்கொளிசேர் விண்ணாகி மண்ணாகி யித்தனையும் வேறாகி) அநாதியே நின்றருளும் தமதியல் புணராது கர்ம பிரஹ்மவாதிகளாய்க் கருமத்தையே கடவுளாக மேற்கொண்டிருக்கின்றனர் என்று அவர்களது அறிவின் சிறுமை யைத் திருவுளத்தெண்ணித் தாம் அவர்கள் கண்டு நாணமடையும் வண்ணம் சிறிதுபொழுது ஆநந்தக் கூத்தாடிக் கைலாசத்துக் கெழுந்தருளிப் பார்வதியாரோடு வீற்றிருந்தனர்.

இச்செய்தி இங்ஙனமிற்க. பந்தகனென்னும் இராக்கதன் பிர மனது அனுக்கிரகத்தாற் சூரியசந்திரர்களிருக்குமளவும் சிரஞ்சீவி

யாயிருக்கும் வரத்தைப்பெற்று, இந்திராதிதேவர்களுக்குவைரியா யும் சித்தர் முனிவர்முதலியோர்க்குப் பிராணகண்டகனுயும்உலவி எல்லாவுலகங்களையும் வென்று, பின்னர்கைலாசத்திற்குச் சென்ற னன். ஓராதாருள்ளத் தொளிக்கு மொளியானும், கரவாடும் வன் னெஞ்சர்க் கரியானுமாகிய இறைவன் அவன் கண்ணுக்குத்தோன் ருமல் தமது கணங்களோடு மிருப்ப பந்தகாசுரன் தன் பரிவாரங்க ளோடு கயிலையிலிருந்து எல்லாவுயிர்களையும் பீடித்துக்கொண்டு வாழ்நாளைக்கழித்து வந்தனன்.

இவனது உபத்திரவத்தைச்சகிக்கமுடியாத தேவர்கள் கைலா சத்திற்கு வடக்கிலுள்ள கோமுகமென்னுந் திவ்ய க்ஷேத்திரத்திலி ருக்கும் பிலத்துட் சென்று காஞ்சிக்ஷேத்தில் காமகோடியாகிய பிலத்தின் வழிபாய்வெளியேவந்தனர். அப்பிலமூலத்தில் காமகோ டீஶ்வரியாயும், மஹாதேவியாயும், திரிபுரசுந்தரியாயும் எழுந்தருளி விளங்கும் தேவியைத்தரிசித்து நமஸ்கரித்து தங்கள் தங்களுக்கு வேண்டியவைகளைப் பிரார்த்தித்துக்கொண்டிருக்கும்பொழுதுசிவ மபெருமானுர் அப்பிலத்தின்மகிமையைத்தேவர்களுக்குத்தெரிவிக்க அப்பிலத்தினின்று வெளிவந்து கோடிசூரியப்பிரகாசமாக திவ்யரூ பத்தோடும் நின்று ஓதேவர்காள்! கோ ரூபமாய் விளங்கும் பூமிக் குக் கோமுகக்ஷேத்திரம் முகமென்றும், ஸ்ரீபுரம்சிரமென்றும், இமா லயம் கண்டமென்றும், கேதாரம் உதரமென்றும், காசி புருஷ்ட மென்றும், கமலாலயம் அதற்கு மூலமென்றும், காஞ்சிஇடையென் றும், இக்காமகோடிபீடம் அதற்கு நடுவென்றும், அதிலுள்ளபிலம் துவாரமென்றும், சொல்லிவரும்பொழுது தேவர்கள் இறைவரை வணங்கித் தேவரீருடைய திருமேனி எக்காலத்துங் கண்டறியாத திவ்ய தேஜஸோடும் இப்பொழுது ஒளிவிட்டொளிர்கின்றதே இதன் காரணமென்னையோவென்று வினவினர்.

பெருமானர் ஓதேவர்காள்!யான்பூமிதேவிக்கு முகமாகியகோ முகமென்னும் க்ஷேத்திரத்தின் வழியாய்ப் பிரவேசித்துக் குண்ட லினிமார்க்கமாய் இக்காமகோடிபிலத்துவாரத்தின்வழியாய் வெளி வந்தேனுகலான் இவ்வரியவுருவத்தோடும்விளங்குகின்றேனென்ற றிவீர்.சாதாரணமாய்உலகிலுள்ளவர்கள்பொன்னிஞல்ஒருபசுவைப் போலும் உருவமைத்து அதன்கர்ப்பத்தில் வசித்துப் பின் வெளிப் படுவாராயின் அவர்கள் பிரமதேஜஸைபெற்றுவிளங்குவாரென்ருல் சிற்சத்திசொருபமாகிய இக்காமகோடி பிலத்தின்வழியாய்வெளிப் பட்டயான் இப்பேரொளியோடும் விளங்குவது ஓர்ஆச்சரியமா!இப் பிலத்தின் பெருமையை யான் என்னென்று கூறுவேன்! ஓதேவர் காள்! எவனெருவன்இக்காமகோடிபீடத்தைநாடோறுமாவது ஒரு வாரமாவது ஒருபக்ஷமாவது,ஒருமாதமாவது பிரதக்ஷணஞ்செய்கின் ருனே அவன் மஹாபாதகனுயினும் முக்தனுவான். பிரதக்ஷணஞ் செய்யும் ஒவ்வொரு அடிக்கு ஒவ்வொரு கோகர்ப்பத்தினின்றும் பிறந்தபலனை அடைவான். நாடோறும் பிரதக்ஷணஞ் செய்பவனை டையும் பலன்கள் சொல்லமுடியா, பிரதணஞ்செய்யாதவன் தேவ னுயினும் அவன் கழுதைக்குச் சமமாவனென்று காமகோடிபிலத் தின் பெருமைகளை யெடுத்துக்கூறி நீங்கள் இந்தப் பீடத்தைவலம் வருவீராயின் பந்தகாசுரனல் நீங்களடைந்திருக்குந் துன்பத்தை நீங்கப்பெறுவீர்கள். அவனது துன்பம் நிவர்த்தியாகுமளவும் இப் பிலத்தருகிலுள்ள சண்பகவிருக்ஷத்தில் நீங்களனைவரும் கிளிவடி வங்கொண்டு வாழக்கடவீர்களென்று வரந்தந்துபோயினர். பின் னர் தேவர்களெல்லாம் சிவபெருமானர் அருளியவாறே அப் பிலத்தை நாடோறுந் தவருமல் பிரதக்ஷணஞ்செய்து கிளிபுருவங் கொண்டு சண்பக விருக்ஷத்தில் பதினுயிரம்வருடம் வசித்திருந் தனர்.

மஹிமை —நர்மதாநதிதீர வாசியாகிய பலபத்திரனென்னும் ஓர் அந்தணன் (வஜ்ஜிரேஸ்வரி) என்னும் தனது பத்தினியை வெறுத்துத் திரஸ்கரித்துப் பாதார விருப்பங்கொண்டு அவர்கள் பால் தன்னிஷ்டப்படித் திரவியங்களை விரயப்படுத்திச் சுகித்துக் கொண் டிருந்தனன். விருத்ததிசை வந்தகாலத்தில் சரீரத்தில் கருங்குஷ்டமும், ஆண்குறியிலும் பீஜத்திலும் இரணமும், உண் டாகி நாட் செல்லச்செல்ல ஆண்குறி க்ஷீணப்பட்டு இரணம் மேலிட்டு மிகவும் வருத்தமுறச்செய்ய, அவனைக் கண்ணுற்ற பெரி யோர்கள் அநேக ஔஷதப் பிரயோகங்கள்செய்தும் நிவிர்த்திக்க முடியாமற் போயிற்று. அப்பெரியோர்கள் இது பாபத்தால்வந்த இரணமாதலால் ஔஷதங்களாற் போகாது. பாப பரிகாரத்தாற் போக்குவதே முறைமையாமென் றெண்ணிப் பொன்னால் பசு வொன்றுசெய்து அதன் கர்ப்பத்தில் அவனை வசித்துவரச்செய்து அப்பொற்பசுவைப் பிராமணர்களுக்குத் தானஞ்செய்தனர். செய் தும் வியாதிநீங்குதலைக்காணுமல் வருந்திக்கொண்டிருக்குஞ் சமயத் தில் காஞ்சிகாமகோடிபீடத்தின் பிரதக்ஷணமஹிமையைச் சிலமுதி யோராற்கேட்டு அக்கணமே தன் மனைவியுடன் காஞ்சிப்பதியை யடைந்து ஒருமாதம்வரையில் நாடோறுந்தவராமற் பிலத்தை நூற் றெட்டுப் பிரதக்ஷணஞ்செய்துவந்தனன். நாளுக்நாட் பிணிநீங்கப் பெற்றுச் சரீரகாந்தியையும் புத்திரபௌத்திராதி சம்பத்துக்களையு மடைந்துப் புண்ணியசீலனாய் வாழ்ந்திருந்து, பின் தேவியினு லனுப்பப்பட்ட விமானமேறி அம்பிகையின் சரணாரவிந்தத்திற் கலந்தனன்.

பதினொன்ரும் அத்யாயம் பிலாகாச ப்ரபாவம்

முற்றிற்று.

———

ஸ்ரீ த்ரிபுரசுந்தர்யைநமஃ

# பன்னிரண்டாம் அத்யாயம்.

## மஹா த்ரிபுரசுந்தரி வர்ணனை.

காமகோட்ட மென்கிற விடத்தில் காயத்திரி மண்டபத்தில் பிலாகாசமாகிய பீடத்தில் காயத்திரியாகிய ஓங்காரகோணத்தில் பராசத்தி சொரூபிணியாகிய காமாக்ஷிதேவி எல்லாவுலகங்களையும் படைப்பதற்குக் காரணமாயுள்ள சகளவடிவங்கொண்டு பத்மாசனியாய், சதுர்ப்புஜையாய், முக்கண்ணுடையளாய், மூலசத்தி, ஆதிசத்தி, ஆதிலக்ஷ்மி, ஆத்துமசத்தி, பிரஹ்மவித்தை, என்கிற நாமங்களாற் றுதிக்கப்பட்டவளாய், தாமரைமலர்போன்ற காந்தியுடையவளாய், சந்திரசூடாமணியாகிய கிரீடந்தரித்துப் பாசம், அங்குசம், கோதண்டம், (கரும்புவில்) பஞ்சபாணம் என்கிற இவைகளை தரித்திருக்கின்ற திருக்கரங்களை யுடையவளாய், இருசெவியிலும் சூரிய சந்திரர்கள் காதோலையாய் ஒளிவீச, சிவந்த பட்டாடைபுனைந்து திவ்யாபரணங்களால் அலங்கரிக்கப்பட்டு, சகல சௌபாக்கியங்களையுந் தரவல்ல மாங்கலியம் கண்டத்தில் விளங்கத் தாமரை முதலிய மலர்மாலைகளசைந்தாட இராஜராஜேஶ்வரியாய், ஸ்ரீவித்யாபரமேஶ்வரியாய், திரிமூர்த்திகளா லாராதிக்கப்பட்டவளாய், காமேசரால் விரும்பப்பட்ட தேவியாய் சிவசங்கரருக்கு ஆத்மசொரூபிணியாய், அச்சங்கரரால் விரும்பப்பட்டவளாய் சகலகலாரூபிணியாய், சர்வதத்வ சொரூபிணியாய், சகல பிரபஞ்சரூபிணியாய், சர்வபிராணி சொரூபிணியாய், காலசக்கர ரூபிணியாய், ஸ்ரீகாஞ்சி நகரத்திற்கு ஈசையாய், அவ்விடத்தில் சரண்புகுவோர்க்கு சகலா

பீஷ்டங்களுந்தரும் பிரதானியாய், இலக்குமி சரஸ்வதி என்னும் இருவரும் இடம் வலம் என்னும் இரண்டு பக்கங்களினின்று வீசப் பட்ட சாமரங்களை யுடையவளாய், சதாசிவாதி மூர்த்திகளுக்கும் கௌரியாதி சத்திகளுக்குங் காரணியாய், காமகோடி என்றும், திவ்யமங்கள ரூபிணியாகிய காமாக்ஷி என்றும், சூதலிங்க சாரணி என்றும், சூதபீஜ அர்த்தரூபிணி என்றும், சிவனுருக்கதிகை என்றும், சிவாங்கத்திலிருப்பவளென்றும், சிவமூர்த்தி என்றும், சிவத்தைக்கொடுப்பவளென்றும், மஹா காமேசருக்கு மஹிஷி என்றும் மஹாத்ரிபுரசுந்தரி என்றும் சொல்லப்படுந் திருநாமங்களாற் பிரசித்திபெற்று ஸ்ரீசங்கரநாயகியாய் வீற்றிருக்கின்றனள்.

அங்ஙனம் வீற்றிருக்கின்ற தேவியை சிவாஞ்ஞையால் கிளி ரூபமாய்ச் சண்பகவிருக்ஷத்தில் வசிக்கின்ற தேவர்கள் ஹிருதயகமலத்தில் தியானஞ்செய்து, பந்தகாசுரனை நாசப்படுத்த வேண்டித் தவம்புரிந்துவந்தனர். அம்பிகை அவர்களது தவத்துக்கிரங்கித் தயையுடையவளாய்ப் பிரளயகாலாக்கினி சொரூபிணியாய் மிக்க கோபத்தோடும் பிலத்தினின்றும் வெளிப்பட்டு எல்லாவுலகங்களையும் பஸ்மீகரப்படுத்தி, பஸ்மீகரப்படுத்திய அவ்வெளியில் நிர்க்குணையாகிய தேவியானவள் சகுணமாகிய திருவுருவுங்கொண்டு காயத்திரிமண்டப மத்தியில் தானொருத்தியாகவேயிருந்து தனதுவாம நேத்திரத்தில் விஷ்ணுவையும், தக்ஷிணநேத்திரத்தில் பிரமனையும், பாலநேத்திரத்தில் உருத்திரமூர்த்தியையும் சிசுரூபமாக உண்டாக்கிப் பிரமனுக்குச் சிருஷ்டி வித்யாத்மகமாகிய பாலையும், விஷ்ணுவுக்கு ஸ்திதி வித்யாத்மகமாகிய பாலையும், உருத்திரமூர்த்திக்கு இலய வித்யாத்மகமாகிய பாலையும் ஊட்டி மறைந்தனள்.

திரிமூர்த்திகளும் பாலுண்டவளவில் யவ்வனரூபமடைந்து, உலகம் சூன்யமாயிருப்பதைப் பார்த்து ஆச்சரியமடைந்து சொப்பனத்திற்காணும் பொருள் மறைதல்போல் போயிற்றே என்று

ஒருவர்க்கொருவர் பேசிப்பயமடைந்தவர்களாய்ப் பின்னர் ஆலோசித்துத் தாம் செய்யத்தகுந் தொழில்களையெண்ணிப் பிரமன் முன்னிருந்தவண்ணந்தாவரசங்கமமாகியவுலகத்தைப்படைக்கவும்,விஷ்ணுருத்திரர்கள் காத்தல் அழித்தலாகிய தொழில்களைச்செய்யவும், ஆரம்பித்தகாலத்திற் பந்தகாசுரனுடுஉலகம்விருத்தியடைந்தது.

சண்பகவிருக்ஷத்தில் கிளிரூபமாயிருந்த தேவர்கள் ஒருஜாமத்துக்குள் தேவி திரிமூர்த்திகளைப்படைத்து உலகத்தைச்சிருஷ்டிப்பித்த வதிசயத்தை யொருவர்க்கொருவர் பேசி இன்னும் என்ன அதிசயம்விளையுமோவென் றெதிர்பார்த்திருந்தனர். அவர்களங்ஙனமிருக்க, திரிபுரசுந்தரியாகிய அம்பிகை திரிமூர்த்திகளைப்படைத்த பின்னுளாகிய மறுநாளிரவில் ஸ்ரீகைலாயத்தில் பந்தகாசுரன் நித்திரைசெய்வதைப்பார்த்துக்கோபங்கொண்டவளாய்ஒருபாதத்தை யவனது கண்டத்திலும், மற்ரெரு பாதத்தை யவன்மார்பிலும் வைத்துப் பதினெட்டாயுதங்களோடுகூடிய பதினெண் புஜங்களையுடைய பைரவரூபிணியாய் அவனது சிகையைப் பலமாய்ப் பிடித்துக்கொண்டு 'சக்கராதி ஆயுதங்களால் அவனது புத்திரபௌத்திர பந்து மித்திர பரிவாரங்க ளிருக்குமிடங்களில் க்ஷணத்துக்குட் சென்று அவரவர்களை அந்தந்த க்ஷணமேகொன்று சூரியோதய காலத்தில் ஐந்து வயதுடைய கன்னிகையாய்க் காமகோடி பீடமாகிய பிலத்துவாரத்தை வந்தடைந்தனள்.

அப்பொழுதுஅங்கிருந்ததேவர்கள் கன்னிகைஉருவமாகிவந்த அம்பிகையினது திருக்கரத்தில் பர்வதாகிருதியாயிருக்கின்ற பந்தகாசுரனுடைய சிகை சிக்குண்டிருக்குங் கோரத்தைக்கண்டு பயந்து பின் மரணமடைந்தானெனத் தெளிந்து, சகல லக்ஷணத்தோடுங் கூடிய அதிசுந்தரமாகிய திருமேனி யுடையவளாயும்,சர்வாபரணங்களால் அலங்கரிக்கப்பட்டவளாயும், நெருப்பிலிட்டபொன்போல்

ஒளிவிடுந் திவ்யமாகிய பீதாம்பரந் தரித்தவளாயுங்காணப்படுமக்கன்னிகையைக்கண்டு துந்துபி, சங்கம், பேரிகை,படகம்,காகளம்,புள்ளாங்குழல், தாளம்,வீணை, மத்தளம் முதலிய பல தேவவாத்தியங்களை முழக்கி, தாமரை,மல்லிகை, முல்லை, பாரிஜாதம், சண்பகம் முதலிய தேவமலர்களையும், கஸ்தூரிமுதலிய சுகந்தங்கள் கலந்த சந்தனக் குழம்பையும் மழைபோல் வாரியிறைத்து, உனக்கு ஜயமுண்டாகுக, மங்களமுண்டாகுகவென்று போற்றிப் பிரதக்ஷிண நமஸ்காரங்கள் பலசெய்து, ஹே கல்யாணீ! ஹே தேவீ! நீயார்? எங்கிருந்து வருகின்றாய்? இந்தப் பந்தகனுனவன் உன்னால் என் கொல்லப்பட்டான்? எவ்விதமாகக் கொல்லப்பட்டான்? இவனிறந்தது மிக ஆச்சரியம்! பிரமனாதியாகச்சொல்லப்பட்ட நாங்களனைவரும் இவனால் பீடிக்கப்பட்டிருந்தோம். இது நிற்க, எந்தக்காரணத்தினால் பிலத்தினின்றுந் தோன்றிய அக்கினியினால் எல்லாவுலகங்களும் கொளுத்தப்பட்டன? இவையாவும்சொல்லவேண்டுமென்று கேட்க, தேவி இக்காரணங்களைப் பின்னர் கூறுகின்றேன் என்று பிலத்தைவிட்டு வெளியே வந்து நின்று, நீங்களிப்பொழுது இவ்விடத்தில் ஓர் பள்ளந்தோண்டி அதில் பிரேதரூபமாயிருக்கின்ற இப் பந்தகனைப் புதைத்து ஜயஸ்தம்பம் நாட்டி அவ்விடத்தினின்றும் பிலாகாசத்துக்குப்போக ஓர் துவாரமமைத்து,அதற்கருகானதெற்கில் பிலத்தின்வெளி எவ்வளவுஇருக்கின்றதோ அவ்வளவும்வேதங்களையே நாற்சதுரங்களாக வமைத்து,அதில் காயத்திரியினுடைய வர்ணங்களையே இருபத்துநான்கு கால்களாக நாட்டி, வியாக்ருதியாகிற மூன்றக்ஷரங்களை மூன்று கண்டங்களாகச்செய்து, காயத்திரி மண்டபமென்று பெயரிட்டு, அம்மண்டபத்துள் பிரணவத்தை மாணிக்கமயமான சிங்காசனமாக வமைத்து, அப்பீடத்தின்மேல் கன்னியாரூபமாக விருக்கின்ற என்னைப்போல் ஒரு பிம்பப்பிரதிஷ்டை செய்து, ஷடாதாரங்களிற் காணப்படும் ஷட்தரிசன

சொரூணியாயும், நவாவரண மத்தியி லிருப்பவளாயும், பிலத்துக் கதிபதியாயு மிருக்கிற பராசத்தியை ஷடாம்நாயமென்கிற மந்திர முறையால் அந்தரியாக முறையின்படி யருச்சித்துப் பின் ஆவாகித் துப் பால் தயிர் தேன் இளநீர் முதலிய பல அபிஷேகத்திரவியங்க ளால் அபிஷேகித்துச் செந்நிறமுள்ள புஷ்பங்களாலும், அக்ஷதைக ளாலும், தூபதீபநைவேத்திய ஆர்த்தி ஜபமென்கிற பஞ்சோபசா ரங்களால் விதிப்படி ஆராதித்து சுகந்த சம்பந்தமாயுள்ள சகல திர வியங்களாலும்லேபனஞ்செய்து,பிலத்துவாரத்தில்கொடுக்கவேண் டிய பலிகளுங்கொடுத்து, கதவைமூடிவிட்டு வெளியேயிருந்து சூரி யோதயமாகுமளவும் மௌனமாயிருந்து என்னைத் தியானித்து, ஸ்ரீவித்யா மந்திரத்தை ஜபித்து, ஜபசமர்ப்பணஞ்செய்து, உதய மானவுடன் கதவைத்திறந்து என்னைத் தரிசனஞ்செய்யுங்கள். அப்பொழுது நீங்கள் கேட்ட கேள்விகளுக்கு விடைகூறுகின் றேன். அதுவரையில் என்னை யொன்றுங் கேட்கவேண்டாம் என்றனள்.

அதுகேட்ட தேவர்கள் வணங்கித் தேவி கட்டளையிட்டவண் ணம் பந்தங்களைப் புதைத்து, வெற்றிக்கொடியாகத் துவஜஸ்தம் பத்தை நாட்டி, காயத்திரி மண்டப பிரதிஷ்டையும், அதன்பின் செய்யவேண்டிய பூஜையையும், அர்த்தராத்திரியிற்செய்து, கதவை மூடி, அருணோதயம் வரையில் மந்திரத்தை ஜபித்திருந்து,பின் அரு ணோதயகாலத்தில் ஆசாரத்தோடு கூடினவர்களாய்க் கதவைத் திறந்து பார்க்கும்பொழுது தாங்கள் பிரதிஷ்டை செய்திருந்த விக் கிரகத்தைக் காணாமல் இராஜராஜேஸ்வரியாகிய திரிபுரசுந்தரி நிஜ ரூபத்தோடும் ஆவிர்ப்பவித்திருப்பதைக் கண்டனர்.

அந்த ஆவிர்ப்பவகாலமானது—சாவித்திரி கல்பம். சுவாயம்பு மனுவினுடைய தாமசகாலம். கிருதயுக ஆரம்பம் விஷ்ணுமோகினி யுருவங்கொண்ட சமயம். ஸ்ரீமுகவருடம் சூரியன் கும்பத்திலிருக்

கின்ற பால்குனமென்கிற பங்குனிமாசம் கிருஷ்ணபக்ஷம் பிரதமை திதி. பூரநக்ஷத்திரத்தின் மத்தியகாலம். ஐந்தாம் ஜாமம். சுக்கிர வாரம் உதயகாலம்.

அந்தச் சுபதினத்தில் காணப்பட்ட இராஜராஜேஸ்வரியைத் தரிசித்து. இதுவென்ன ஆச்சரியமென்றும், தேவியினுடையசரித்திரம் மிக அற்புதமென்றும், ஹே ஜெயதேவி! ஜகன்மாதா! திரிபுர சுந்தரீ! என்றும் தோத்திரஞ்செய்து நமஸ்கரித்து, நாங்கள் பிரதிஷ்டைசெய்து பூசித்த அம்பிகையெங்கே? பந்தகாசுரனைக்கொன்று அவனைக்கொண்டுவந்து பிலத்தருகேநின்ற கன்னியாரூபமெங்கே? அந்த இரண்டு சொரூபங்களையுங் காண்கிலேம். இப்பொழுது உன்னைத்தான் காண்கின்றேம். நீயாரோ அறியோம்? எங்களுக்கு அந்தக் காரணங்களைக் கிருபையோடுசொல்லவேண்டுமென்று பிரார்த்திக்க, திரிபுரசுந்தரி ஓ தேவர்களே! நான் அந்தக் காரணங்களைச் சொல்லுகிறேன். சாவதானமாய்க் கேளுங்களென்று சொல்லத் தொடங்கினள்.

ஓ தேவர்காள்! உங்களுடைய இதத்தின் பொருட்டுப் பிரளய காலாக்கினி சொரூபமாய் அர்த்தராத்திரியில் இந்தப்பிலத்தினின்றும் வெளிப்பட்டுச் சர்வ ஜகத்தையும் பஸ்மீகரஞ்செய்து உகார அகரா, மகாரசொரூபிகளென்று சொல்லப்பட்ட பிரம்ஹ,விஷ்ணு, உருத்திரர்களை சிருஷ்டியாதி தொழில்களை யுத்தேசித்து என்னுடைய மூன்று கண்களினின்றும் உண்டாக்கி, திரிபுரசுந்தரியாகிய நான் காமாக்ஷி என்கிற பெயர்பெற்றேன்.

அந்த மும்மூர்த்திகளும் தங்கட்குரிய தொழில்களைசெய்ய வுத்தேசித்துப் பிரமன் சிருஷ்டி செய்தபொழுது, உங்கள் பகைவனாகிய பந்தகாசுரன் முன்போல் தோன்றினன். அதைக்கண்டயான் பைரவ ரூபங்கொண்டு,அந்தப்பந்தகனைக்கொன்று,அவனது

வந்த மித்திரர்களையும் நாசஞ்செய்து பிரேதமாய்ப்போன பந்தக னைச் சிகைபிடித்திழுத்துக்கொண்டு கண்டார் பயப்படத்தக்க என்னுடைய பைரவ ரூபத்தைமாற்றிக் கன்னியாரூபங்கொண்டு. மஹாபிலத்தினின்றும் வெளிப்பட்டு நீங்கள் காணுமாறு வந்தேன், வந்த என்கையில் பந்தகன் பிரேதமாயிருந்தும் நீங்கள்கண்டுபயந்த படியால் அந்தப் பயநிவர்த்தியின்பொருட்டும், பயநிவர்த்திசெய்வ தில் வெற்றியுடையவள்யான் என்பதை யாவரும் அறியும்பொருட் டும் அவனைப் புதைத்து ஜயஸ்தம்பம் நாட்டும்படி உங்கட்குக்கட்ட ளையிட்டேன். நீங்கள் என்னைப்புகழ்ந்து தோத்திரஞ்செய்து அன்பு பாராட்டியபடியால் இந்தப் பிலத்தைக் காயத்திரி மண்டபத்தால் மறைத்து, ஓங்கார சிம்மாசன மமைத்து, அதில் என்னைப் பிரதிஷ் டை செய்யுங்களென்று விதித்தேன். அதுபோலவே நீங்கள்செய்த படியால் நீங்களனைவரும் ஆச்சரியானந்த சாகரத்தில் மூழ்குகிமித் தமும், உங்களிஷ்டார்த்த சித்தியின் பொருட்டும், சித்சொரூபமா கிய பிலாகாசத்துள்ளே வசிக்கின்ற திரிபுரசுந்தரியாகிய யான் அதைவிட்டு நீங்கள் பிரதிஷ்டைசெய்த பிம்பத்தில் இப்பொழுது பிரகாசிக்கின்றேன்.

இனி நான் இந்தத் திவ்யமாகிய மண்டபத்தில் நீங்காது எப் பொழுது மிருப்பேன். இந்த இடந்தான் மேலானது. இதுதான் எனக்கிடம். இதுதான் அழிவில்லாதது. எக்காலத்தும் அழிவில் லாத காரணத்தால் இது பிரளயஜித்தெனப் பெயர்பெற்றிருக்கின் றது என்று திரிபுரசுந்தரியாகிய தேவிசொன்னதைத் தேவர்கள் கேட்டு, நமஸ்காரஞ்செய்து ஆராதித்து அத்தேவிக்குப் பிலம் உள் ளிடமாயிருப்பதால் அந்தப் பிலத்துவாரத்திற்கும் நீராஞ்சன முத லிய உபசாரங்கள்செய்துப் பின்னர் அத்தேவியை அந்தணர்களு டைய ஹிருதயத்தி லிருப்பவளாகத் தியானித்து, அநேகவிதமான பக்ஷிய வகைகளோடுகூடிய அறுசுவை யுணவுகளையுண்ணும்படிச்

செய்தலாகிய சமாராதனைசெய்து,அவர்களுக்கெல்லாம் நல்லசுகந்தமாகிய சந்தனம்,புஷ்பமாலை, வஸ்திரங்கள், ஆபரணங்கள்முதலான இவைகளெல்லாம் இரண்டு பங்காகக்கொடுத்து,அவர்களைச் சந்தோஷிப்பித்து,யாவுந் தேவிக்கே அர்ப்பணமென்றுசொல்லி,தோத்திரவகைகளால் அம்பிகையைத் திருப்தி செய்வித்தனர்.

அதன்பின்னர் சிங்காசனத்தில் வீற்றிருக்கின்றபரமேஸ்வரிக்குப் பட்டாபிஷேகவுற்சவஞ்செய்யவேண்டுமென்றெண்ணித்தேவசில்பி பல்லக்கையும், பிரமன் முத்துக்கொடையும், விஷ்ணு விருத்தாகாரமாயுள்ள நவரத்தனமகுடமும், உருத்திரமூர்த்தி ஸ்ரீசக்கரமென்னும் பதக்கமுங்கொடுக்க, தேவர்கள் அலங்காரஞ்செய்து, அன்று மாலைக்காலத்தில்மஹோற்சவமாயெழுந்தருளிவரச்செய்து, முன்போல் பீடத்தில் அம்பிகையை ஸ்தாபனஞ்செய்து;ஹேதேவி! இக்காஞ்சியில் சாந்நித்யமாயிருக்க வேண்டுமென்று பிரார்த்திக்க, அம்பிகை நான் க்ஷீரசமுத்திரவிருக்கும் ஸ்ரீபுரத்தில் எவ்வாறு சாமர்த்திய ரூபிணியாய், சத்தியென்கிற பெயருடையவளா யிருக்கின்றேனோ அவ்வாறே இவ்விடத்தில் காமாக்ஷி என்னும் பெயருடன் சந்தானுதிவரங்களைத் தருபவளாய் வசித்திருக்கின்றேன். ஆகையால் நீங்கள் என்னை நாடோறும் தரிசித்துவாருங்கள். ஸ்ரீபுரத்தைக்காட்டிலும் இது அதிகம் என்று யாவருக்கும் ஆஞ்ஞை செய்ய, உருத்திரர் முதலிய யாவரும் மிகவும் சந்தோஷித்தவர்களாய் ஸ்தோத்திர நமஸ்காராதிகள் செய்து, எவர் அம்பிகை யுற்பத்தியான தினத்தில் பூஜிக்கின்றார்களோ அவர்கள் கோடி யக்ஞபலத்தை யடைவார்களென்று அனுக்கிரகித்து மறைந்துபோயினர்.

பின்னர் உருத்திரமூர்த்தி துர்வாசராய் அநேக சீடர்களுடன் கூடி, உள்ளே பிரவேசித்து விசுவாமித்திரர், கௌதமர், காசிபர், அத்திரி, பரத்துவாசர், அகஸ்தியர் முதலானவர்களையும், அவர்க

